4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 மதுரை 15-4-72 சனி மலர் 90

## அரசு விசைப்படகுத் தொழிலாளர்கள் ஏப். 15-ல் கோட்டைமுன் ஆர்ப்பாட்டம்

சென்னை, ஏப். 14—

அரசு விசைப்படகு தொழிலாளர்கள் 28-3-72-ம் தேதியிலிருந்து சலவைக்கூலி உயர்வு, போனஸ், சைக்கிள் அலவன்ஸ், கேசுவல் லீவு போன்ற கோரிக்கைகளுக்காக உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்;

இந்த கோரிக்கைகளை அரசு இதுவரை ஏற்காததால், சங்கத்தின் தலைவர் கே. எம். அரிபட் தலைமையில் 15—4—72-ம் தேதி சனிக்கிழமை மாலையில் கோட்டைக்குச் செல்கின்றனர், அங்கு தங்களுடைய கோரிக்கைகளுக்காக அரசு அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்துவார்கள்.

## அரைகுறைவேலைக்கும் ஆபத்து
### 20 ஆயிரம் டிராக்டர்கள் இறக்குமதி

புதுடெல்லி, ஏப். 14—

நமது நாட்டில் 20 ஆயிரம் டிராக்டர்களை இறக்குமதி செய்ய மத்திய அரசு முடிவுசெய்துள்ளது.

இத் தகவலை உணவு—விவசாயத்துறை ராஜாங்க அமைச்சர் ஏ. பி, ஷிண்டே நாடாளுமன்றத்தில் வெளிட்டார்.

ஏற்கனவே, வருடத்திற்கு 6 மாதங்களுக்கும் குறைவான காலத்திற்குத்தான் அரைகுறை வேலையே விவசாயித் தொழிலாளர்களுக்கு — கிடைத்து வருகிறது.

அந்த அரைகுறை வேலைக்கும் ஆபத்து!

# அமெரிக்காவுக்கு தோல்விமேல் தோல்வி!

## வியட்நாம் விடுதலைப் படையின் வீரசாகசங்கள்

சைகோன், ஏப். 13—

**தென் வியட்நாமில், இன்று அமெரிக்க ஆக்கிரமிப்பு படைகள் மீதும், தென் வியட்நாம் பொம்மை அரசாங்கப் படைகள் மீதும் தென் வியட்நாம் விடுதலை வீரர்கள் உக்கிரமானத் தாக்குதல் தொடுத்தனர். அன்லாக் என்னும் நகரின் வட பகுதியை விடுதலைப்படையினர் கைப்பற்றினர்.**

சைகோன், ஏப். 14— அன்லாக் நகரம் விடுதலைப் படையினரின் கைக்கு வந்து விட்டது என்ற செய்தியை சைகோனில் உள்ள அமெரிக்கர்களே ஒத்துக்கொள்கின்றனர்.

கடுமையான யுத்தத்திற்குப் பிறகு, இந்த நகரம் விடுதலை செய்யப்பட்டது. தெற்கு வியட்நாமின் கூலிப்பட்டாளத்தின் கைகளில் இருந்த துப்பாக்கிகளையும் அவர்கள் ஓட்டி வந்த டாங்குகளையும் பறித்துக்கொண்டு, ஒவ்வொரு தெருத்தெருவாக விடுதலைப் படையினர் போராடி அந்த நகரத்தைப் பிடித்தனர்.

இந்தப் போராட்டம் நடக்கும் பொழுது, அமெரிக்க விமானங்கள் 'ஹெலிகாப்டர் விமானங்கள் குண்டுமாரி பொழிந்தன.

அவற்றை சமாளித்துக் கொண்டு விடுதலைப் படையினர் பிடித்தனர்.

அன்லாக்கைக் காப்பாற்ற சைகோனில் இருந்துவந்த அமெரிக்கத் துருப்புகளை வழியிலேயே மறித்துத்தாக்கினர், விடுதலைப் படையினர்.

ஆகவே, மேலும் அன்லாக்கை நோக்கிச் செல்ல முடியாமல் தடுத்துவிட்டனர். அந்தநகரை விடுதலைப் படையினர் முற்றுகை செய்து பிடிப்பதை அமெரிக்காவின் ஆகாயப் படை விமானங்களின் தாக்குதலாலோ, தரைப் படையின் உதவியாலோ ஒன்றும் செய்ய முடியவில்லை.

வியக்கத்தகு சாதனைகளைச் செய்து விடுதலைப் படையினர் அன்லாக் நகரின் பெரும் பகுதியைப் பிடித்து விட்டனர். மிஞ்சியிருக்கும் பகுதிகளில் உள்ள எதிரிகள் நிர்மூலமக்கப் வருகின்றனர்என்று கடைசியாக வந்த செய்திகள் கூறுகின்றன.

### மற்றொரு அமெரிக்கத் தளத்திலிருந்து ஓட்டம்

சைக்கோனுக்கு வடக்கே உள்ள ஹியூ நகரத்திலிருந்து 28 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள பஸ்ட்ரோன் என்ற ஒரு முக்கியமான அமெரிக்க இராணுவத்தளம் விடுதலைப் படையினரால் சுற்றி வளைக்கப் பட்டு கைப்பற்றப் பட்டது. இங்கிருந்து தாங்கள்வாபஸ் வாங்கிக் கொண்டதாக அமெரிக்கர்களே அறித்தார்கள்.

பஸ்ட்ரோன் இராணுவ ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த—சப்ளைகள் செல்லும் பாலத்தைக் கைப்பற்றுவதற்காக விடுதலைப் படையினர் தாக்குதல் நடத்தி, வெற்றியும் கண்டனர். அந்தப் பாலம் தற்போது விடுதலைப் படையினரின் கைக்கு வந்து விட்டது.

தளம் விடுதலைப் படையினரின் கைக்கு வந்துவிட்டதால், இனி ஹ்யூ நகருக்கு ஆபத்துவந்து விட்டதென தென் அமெரிக்க வட்டாரங்கள்கருதுகின்றன.

### 4 அமெரிக்க கப்பல்கள் நிர்மூலம்

மிகப்பெரும் அமெரிக்கக் கப்பல் படையிலிருந்து 4 கப்பல்கள் வடக்கு வியட்நாம் கடற்கரை பிரதேசத்தைத் தாக்கின. அவ்வாறு தாக்கிய அந்த நான்கு கப்பல்களையும் வடக்கு வியட்நாம் கடற்கரைப் பாதுகாப்புப் படைகள் ராக்கெட் பீரங்கிகள் மூலம் சுட்டன. அதனால் அந்த நான்கு கப்பல்களும் பெரும் சேதத்துக்குள்ளாகின.

மறுநாள், வடக்கு வியட்

(8-ம் பக்கம் பார்க்க)

(முன் வந்த செய்தி)

அன்லாக் நகரம் சைகோனுக்கு வட மேற்கே எழுபத்தைந்து மைல் தூரத்தில் உள்ளதாகும். நேற்றுவரை அது விடுதலைப் படையினரின் முற்றுகைக்குள்ளாகி இருந்தது. இன்று விடுதலைப் படையினர், அமெரிக்கப் படையின் எதிர்த் தாக்குதலை தவிடுபொடியாக்கிக் கொண்டு, அன்லாக்கின் வட பகுதியில் ஊடுருவிச் சென்று, அப்பகுதியைகைப் பற்றிக்கொண்டனர்.

மேலும் தெற்கு வியட்நாமின் வட பகுதியில் உள்ள குவாங்ட்ரீ மீதும் தெற்கே உள்ளஅமெரிக்கராணுவதளமான டனுங் மீதும், மற்றும் இரு ராணுவதளங்கள்மீதும் விடுதலைப்படையினர் கடும் தாக்குதல்களை நடத்தி வருகின்றனர்.

### அமெரிக்க உளவு-விமானம் வீழ்த்தப்பட்டது

விடுதலைப் படையினரின் நடவடிக்கைகளைக் கண்டறிய அமெரிக்க ''எலக்ட்ரானிக்'' உளவு விமானம் ஒன்று வந்தபோது, விடுதலைப்படையினரால் அது தாக்கப்பட்டது.

### பாலத்தைக் கைப்பற்றினர்

அமெரிக்கப்படைகளின்

### விமானங்கள் வீழ்த்தப்பட்டன

பிரம்மாண்டமான அமெரிக்காவின் குண்டு வீசும் பி. 52 ரக போர் விமானங்கள் வடவியட்நாம் எல்லைக்குள் சென்று தனது நாசகாரத் தாக்குதலை நடத்தியதும் வடவியட்நாம் வீரர்கள் எதிர்த்துச் சுட்டனர். இவ்வாறு 4 அமெரிக்க விமானங்கள் சுட்டு வீழ்த்தப் பட்டன.

### நிக்சனும் — வியட்நாமும்

ஹலோ ஹலோ... நீங்கள், தலைவர் மாவோ தானே?

சாரி, ராங் நம்பர்

வியட்நாம்

நன்றி: இந்தியன் எக்ஸ்பிரஸ், (13—4—72)

## டாட்டா, பிர்லாவுக்கு தொழில் தொடங்க புதிய லைசன்ஸ்

புதுடெல்லி, ஏப். 14—

இந்திய தொழில் வளர்ச்சி இலாகா 13 பெரு முதலாளிகளுக்கு முக்கியமான தொழில்களைத் தொடங்க லைசென்ஸ் வழங்கியுள்ளது. இதில் அன்னிய மூலதானம் அதிகமாக உள்ள கம்பெனிகளும் அடங்கும்.

54 முக்கிய தொழில்களில் தற்போது தொழில் லைசன்ஸ் கொள்கை தளர்த்தப்பட்டுள்ளது.

இத்தகவலை தொழில் வளர்ச்சி அமைச்சகம் நாடாளுமன்ற தொழில் வளர்ச்சிக் குழுவிடம் தெரிவித்தது. மேலும் 5 பெரிய முதலாளிகளின் தொழில் லைசன்ஸ் விண்ணப்பங்களுக்கும் இவ்வார இறுதிக்குள் அனுமதி வழங்கப்பட்டு விடும் என்று அறிவிக்கப் பட்டுள்ளது.

புதிதாக வழங்கப்பட்டுள்ள இந்த லைசன்சுகளில் பிர்லாவுக்குச் சொந்தமான செஞ்சுரி கம்பெனிக்கும், நேசனல் இஞ்சினியரிங் கம்பெனிக்கும் — டாட்டாவுக்குச் சொந்தமான போர்ப்ஸ் காம்பல் கம்பெனிக்கும், மற்றும் சாராபாய், சைமன்ஸ் போன்ற ஏகபோக பெரு முதலாளிக் கூட்டங்களுக்கும் வழங்கப் பட்டுள்ளது.

மேலும் ஏற்கனவே எக்கச்சக்கமாக உற்பத்தி செய்யும் பெரிய கம்பெனிகளின் உற்பத்தியை இரண்டு மடங்கு, மூன்று மடங்கு அதிகரிக்கவும் அனுமதி யளிக்ககப்பட்டுள்ளது.

இதனல் பல சிறு தொழில்களும், சிறிய முதலாளிகளும் நசித்துப்போகும் நிலை ஏற்பட்டுள்ளது.

## கேரள மாநில சோஷலிஸ்ட் இளைஞர் மாநாடு
### தோழர் தினேஷ் மஜூம்தார் முழக்கம்

டிமிட்ரோவ் நகர் (கோழிக்கோடு) ஏப். 13—

கேரள சோசலிஸ்ட் இளைஞர் சம்மேளனத்தின் இரண்டாவது மாநாடு ஏப்ரல் 7, 8, 9 தேதிகளில் மூன்று நாட்கள் வெகு சிறப்பாக நடந்தது.

மாநாட்டில் தோழர்கள் ஏ. கே. கோபாலன், சுசீலா கோபாலன், இ. கே. நயினர் ஆகிய தலைவர்கள் கலந்து கொண்டனர். மாநாட்டில் மாநிலம் முழுவதிலுமிருந்து 675 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

மாநாடு, 7-ம்நாள் மேற்கு வங்க ஜனநாயக இளைஞர் சம்மேளனத் தலைவர் தோழர் தினேஷ்மஜூம்தார் கொடியேற்றி வைக்க முழக்கத்துடன் ஆரம்பமாகியது.

தியாகிகளுக்கு வணக்கம் செலுத்தப்பட்டது

தோழர்கள் பாட்டியம் கோபாலன், பினராய் விஜயன், வி.வி. தட்சிணாமூர்த்தி கே. மோகன் ஆகியோர் தலைமைக்குழுவுக்கு ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### வங்கத்தில் நடந்தது தேர்தலா?

மாநாட்டை துவக்கி வைத்து தோழர் தினேஷ் மஜூம்தார் உரையாற்றினார்

மேற்குவங்கத்தில் நடந்து வரும் கொடுமைகளைப் பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள்-

இடதுசாரி முன்னணியைச்சேர்ந்த தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கக் கூடாது- குண்டர்கள் பட்டியலைக் கொடுத்து இதில் உள்ளவர்களுக்குத்தான் வேலை கொடுக்கவேண்டும் என்று கம்பெனி நிர்வாகிகளை மிரட்டுகின்றனர்.

கல்லூரி யூனியன் அலுவலகங்களுக்குள் புகுந்து குண்டர்கள் தாக்குகின்றனர்.

### கொக்கரிப்பு

சமீபத்தில் நடந்த தேர்தலில் இந்திரா காங்கிரஸ் ஜெயித்துவிட்டோம் என்று கொக்கரிக்கிறது. அங்கு என்ன தேர்தலா நடந்தது? எல்லா தில்லுமுல்லுகளையும் செய்தனர். தேர்தல் நடைபெறுவதற்கு முதல் நாள் இரவே துப்பாக்கி ஏந்திய குண்டர்கள் வாக்குச் சாவடிகளுக்குள் புகுந்து ஓட்டுகளைப் பறித்து, தங்களின் தேர்தல் முத்திரையைக் குத்தி, ஓட்டுப்பெட்டிகளுக்குள் போட்டு நிரப்பி விட்டனர். வாக்காளர்கள் வந்து வாக்குச்சீட்டு கேட்டால் என்ன செய்வது என்று அதிகாரிகள் கேட்டனர். அவர்களை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம் என்று குண்டர்கள் கூறினர். மறுநாள் ஓட்டுப் போட வந்த மக்களை நோக்கிச் சுட்டு விரட்டியடித்தனர்,

தாங்கள் ஓட்டுப் போடாமல் எப்படி 95 சதமானம் ஓட்டு பதிவானது என்று மக்கள் திகைக்கிறார்கள். காங்கிரஸ் ஆட்சியாளர்கள். நடத்திய தேர்தலைக் கண்டு மக்கள் அதிர்ச்சியடைந்துள்ளனர் உலகம்சிரிப்பாய்ச் சிரிக்கிறது என்று பலத்த கரகோசத்திற்கிடையேமஜூம்தார்பேசிமுடித்தார்.

### இளைஞர் பேரணி

மாநாட்டின் இறுதி நாளான 9ம் தேதி, கோழிக்கோடில் பிரம்மாண்டமான இளைஞர் பேரணி நடைபெற்றது.

செறூட்டி ரோடிலிருந்து புறப்பட்ட அந்த ஊர்வலத்தில் பல்லாயிரக்கணக்கானோர் கலந்துகொண்டனர். ஆயிரக்கணக்கான பெண்களும் ஆர்ப்பரித்து சென்றனர். ஊர்வலம்சென்றபாதைகளெல்லாம் தோரணங்களாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தன!

## நிக்சன் குடும்பத்திற்கு அமெரிக்க கோடீஸ்வரர்கள் பண உதவி
### அமெரிக்க கோர்ட்டில் தகவல்

அமெரிக்காவில், மாக்ரோ-ஹில், கம்பெனி என்பது புகழ்பெற்ற, பதிப்பகக் கம்பெனி. இந்தக் கம்பெனி, பெரிய கோடீசுவரர், ஹாவர்ட் ஹக்ஸ் என்பவரின் வாழ்க்கை வரலாற்றை பிரசுரிப்பதாகஇருந்தது. இதை கிளிப்போர் இர்வின் என்பவர், எழுதியிருப்பதாகக் கூறப்பட்டது ஆனல், திடீரென்று, ஹக்ஸ்ஸின் வக்கீல், மக்ரோ-ஹில் கம்பெனி வாழ்க்கைவரலாறைப் பிரசுரிக்கக்கூடாது என்று தடை கேட்டது. இந்த வழக்கு நியூயார்க் மாநில சுப்ரீம் கோர்ட்டில் நடந்த போது மக்ரோஹில் கம்பெனியார் எதிர்வாதமாக கீழ்வருமாறு கூறினர்.

ஹக்ஸ் விளம்பரத்தைக்கண்டு பயப்படுகிறார். காரணம், அவருடைய வாழ்க்கை வரலாற்றில், அவர் ரிச்சர்டு நிக்சனின் தாயாருக்கும், சகோதரருக்கும் 20,5000 டாலர் கடன் கொடுத்திருக்கிறார், நிக்ஸன் உதவி ஜனாதிபதியாயிருந்தபோது கொடுத்தது இது. அந்தப் பணம் இன்னும் திருப்பி அளிக்கப்பட வில்லை. மேலும், ஹக்ஸ், அமெரிக்க ஜனாதிபதிகளுடன் கொண்டிருந்த தொடர்புகள், அவர், நெவடாவில் வைத்திருந்த ''சூதாட்ட சாம்ராஜ்யம்'' ஆகியவை புற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தப் புத்தகம் பூராவும், மிகவும் பரபரப்பான செய்திகளைக் கொண்டுள்ளது. என்று கூறினார்கள்,

—ஆதாரம் ''நியூடைம்ஸ்',

## மாநிலம் முழுவதும் விவசாயிகள் ஆர்ப்பாட்டம்

மதுரை ஏப். 41—

தமிழ்நாடு விவசாயிகள் சங்க முடிவிற்கிணங்க, மாநிலம் முழுவதும், விவசாயிகள், விவசாய தொழிலாளர்கள், மாணவர்கள் ஆகியோர், கடந்த 10-ம் தேதி ஊர்வலங்களும், ஆர்பாட்டங்களும் நடத்தினர், பல்வேறு இடங்களிலிருந்து, ஆர்பாட்டங்களைப் பற்றியும், ஊர்வலங்களைப் பற்றியும், செய்திகள் வந்த வண்ண மிருக்கின்றன.

### பென்னேரி

பொன்னேரியில், தோழர்கள்சி.கே. மாணிக்கம், எம். நரசிம்மன், கே, கோபாலகிருஷ்ணன், ஆர். நாகரத்தினம், கே. சிவலிங்கம், கே. செஞ்சுராமலிங்கம் ஆகியோர் தலைமையில் பொன்னேவிரி ரயில்நிலையத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, முக்கிய வீதிகள் வழியாகச் சென்று, வட்ட ஆட்சியாளரிடம், கோரிக்கை மனு கொடுக்கப்பட்டது. பஜார்வீதியில் பொதுக்கூட்டம் நடந்தது. கூட்டத்தில் தோழர் வி. பி. சிந்தனும், மற்றும் பல தோழர்களும், விவசாயிகள் கோரிக்கைகளைப் பற்றி விளக்கிப் பேசினார்கள், கூட்டத்திற்கு எஸ். எம். ஆறுமுகம் தலைமை வகித்தார்.

### இராணிப்பேட்டை

10ம் தேதி 11 மணிக்கு தோழர் ஆர்.ஏ. கண்ணன் தலைமையில், நூற்றுக்கு மேற்பட்ட விவசாயிகள் ஊர்வலமாகச் சென்று, கோட்டாட்சித் தலைவரின் உதவியாளரிடம் மகஜர் கொடுத்தனர்.

### காஞ்சீபுரம்

10-ம் தேதி காலை 10 மணிக்கு, அய்யன் பேட்டை, வையாவூர், நெல்லூர், எளுதூர், வேடல், ராஜ்குளம், செட்டியார் பேட்டை, திருக்காலிமேடு, ஓரிக்கை. பொன்னேரி ஆகிய கிராமங்களிலிருந்து, விவசாயிகள் ஒன்று திரண்டு தோழர் கே, எஸ். பார்த்தசாரதி தலைமையில் ஊர் வலமாகச் சென்றனர், கோட்டாட்சி அலுவலகம் சென்று, கோட்டாட்சியாளரிடம் தங்கள் கோரிக்கை அடங்கிய மனுவைக் கொடுத்தனர்.

### கொக்கிரகுளம்

(நெல்லை மாவட்டம்)

தோழர் எஸ், பாலவிநாயகம், (மாவட்டச் செயலாளர்) தலைமையில் தோழர் சீனிவாசன் மற்றும் ஆயங்குளம் விவசாயிகள் ஆகியோர் மாவட்ட ஆட்சி தலைவரிடம். தங்கள் கோரிக்கை அடங்கிய மகஜரைக் கொடுத்தனர்.

### கே.புதுப்பாளையம்

10ம் தேதி காலை இருநூறுக்கும் மேற்பட்ட கொல்லிமலை விவசாயிகள் பாதயாத்திரைக்குழு, நாமக்கல் தோட்டத் தலைவரிடம் தங்கள் கோரிக்கைகளைத் தெரிவித்தது. முந்தியநாள், 9ம் தேதி, களப்பநாயக்கன்பட்டியில் பொதுக்கூட்டமும் நடந்தது. கூட்டத்தில், தோழர்கள் கே. எஸ். சீரங்கன், என். சீத்தாராமன், கே. துரைசாமி, கு. சின்னப்பபாரதி, ப. ரங்கராஜன், ப. செல்லப்பன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர். தோழர் ஏ. வி. பாலகிருஷ்ணன் தலைமை வகித்தார்.

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

நாம் கடற்கரை ஓரம் சென்ற மற்றொரு கப்பலும் தாக்குதலுக்குள்ளாகி அது தீப்பற்றி எரிந்து கொண்டிருப்பதாகச் செய்தி வந்துள்ளது.

# தீக்கதிர்

## பூட்டோவின் சாகசங்கள்

பாகிஸ்தானின் ஜனாதிபதி பூட்டோ தன் கையிலுள்ள இராணுவ சர்வாதிகாரத்தை விடாமல் நீடித்து வைத்திருக்கவே விரும்புகிறார்.

இராணுவ தளகர்த்தர் யாகியாகானுக்குப் பதிலாக ஒரு அரசியல் கட்சியின் தலைவர் பதவியிலிருக்கிறார் என்பதைத்தவிர பாகிஸ்தான் ஆட்சியில் மாற்றங்கள் எதுவும் நிகழவில்லை. பழைய சர்வாதிகார அமைப்பும், அதனுடைய அட்டூழியங்களும், ஜன விரோதச் செயல்களும் நீடிக்கின்றன. தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணய சபையைக்கூட்ட பூட்டோ ஒப்புக்கொண்ட போதிலும், அவ்வாறு கூட்டப்பட இருக்கும் அந்த சபையில் இராணுவ சர்வாதிகாரத்தை நீடிப்பதற்கு ஆதரவான வாக்குப் பெறுவதற்கே ஏனைய கட்சிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தினார் பூட்டோ.

இத்தகைய ஜனநாயக விரோத முயற்சிக்கு, எல்லைப்புற மாகாணத்திலும், பலுசிஸ்தானத்திலும் பெரும்பான்மை இடங்களைப் பெற்றுள்ள கட்சிகளான தேசிய அவாமி லீகும், ஜமாயத்உலிமா கட்சியும் ஒப்புக்கொள்ளவில்லை.

அந்த இருமாகாணங்களிலும் தங்களுடைய கட்சிகளின் ஆட்சிதான் நடக்கவேண்டுமென்றும், அதற்கான முதலமைச்சர்கள் தங்களுடைய கட்சிகளைச்சார்ந்தவர்கள்தான் என்றும், அவர்களின் பெயர்களையும் அறிவித்து அக் கட்சிகள் கிளர்ச்சிகள் நடத்தி வருகின்றன.

தேர்ந்தெடுக்கப்பட்ட தேசிய சட்ட சபையையோ மாநில சட்டசபைகளையோ முந்திய இராணுவ சர்வாதிகாரி யாகியாகான் செய்ததுபோல் கூட்டாமல், மக்களுடையகருத்துக்கு மதிப்புத் தராமல் நடந்து கொண்டதின் விளைவு அந்த இரு மாநிலங்களும் கிட்டத்தட்ட பங்களா தேசம் சென்ற வழியில் செல்லும் நிலைமை உருவாகிவருகிறது.

பங்களாதேச விடுதலைப்போராட்டப்படிப்பினைகளை பூட்டோவும், அவரது இராணுவ சர்வாதிகார ஆதரவாளர்களும் இன்னும் உணரவில்லை. இந்த நிலைமையில் மக்களது தீர்ப்புக்கு மதிப்புத்தர பூட்டோவின் கூட்டம் மறுக்குமானால் ஜனநாயக ஆர்வமுள்ள அந்தமக்கள்தங்கள்பாட்டங்களை மீண்டும் சர்வாதிகாரிகளுக்கு தருவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

உள் நாட்டில் ஜனநாயகத்தை நிலைநாட்ட மறுக்கும் பூட்டோவின் கூட்டம், அண்டை நாடான இந்தியாவுடன் சுமுகமான உறவு ஏற்படுத்திக்கொள்ள முடியாமல் தவிப்பதில் ஆச்சரியமில்லை.

பங்களாதேஷ் என்ற மலைபோன்ற உண்மை தன்முன் நிற்பதை பூட்டோவின் கூட்டம் பார்க்க மறுக்கிறது. தன்னுடைய எஜமானர்களான அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளே பங்களாதேசத்தை அங்கீகரித்தபிறகும்கூட பங்களாதேசத்தை "கிழக்கு பாகிஸ்தான்" என்று பேசி வருவது கேலிக்கூத்தாக உள்ளது.

பாகிஸ்தானில் இராணுவ சர்வாதிகாரம் நடந்துவருவதின் பயங்கர விளைவுகளை பங்களாதேச மக்கள் அனுபவித்து வருகிற இந்தச்சூழ்நிலையில், இந்திய அரசு அண்டை நாடான பாகிஸ்தானுடன் சுமுகமான உறவுகளை ஏற்படுத்திக்கொள்ள முன்வருவது மிகவும் அவசியமாகும். யுத்தக் கைதிகளை பரிவர்த்தனை செய்வது முதற்கொண்டு, சமாதான ஒப்பந்தம் செய்துகொள்வதுவரை எல்லாப்பிரச்சனைகளிலும் நம்முடன் நேசபூர்வமாக வாழ வேண்டிய ஒரு அண்டை நாடு என்ற முறையில் பிரச்சனைகளைத்தீர்க்க முன்வர வேண்டும்.

அதே சமயத்தில் பாகிஸ்தானின் இராணுவம் பங்களாதேசத்தில் புரிந்த அக்கிரமங்களைப்பற்றியும், குறிப்பாக யுத்த குற்றங்கள் புரிந்த குற்றவாளிகளைப்பற்றியும், கொலைகாரர்களைப்பற்றியும் பங்களாதேச சுதந்திர அரசுக்கு விசாரணை செய்து தண்டனை வழங்க உரிமை உண்டு என்பதையும் இந்திய அரசு அங்கீகரித்து, அதன் அடிப்படையில் பாகிஸ்தானுடன் உடன்பாட்டிற்கு வரவும் முயற்சி செய்வது மிகவும் அவசியமாகும்.

## இராசபாளையத்தில் ஆர்ப்பாட்டம்

இராசபாளையம், ஏப். 14—

இராஜபாளையம் தாலுகா தாசில்தார் ஆபீஸ் முன்பு தோழர் எம். தங்கச்சாமி தலைமையில் ஆர்ப்பாட்டம் நடத்தி மனு கொடுக்கப்பட்டது. 9-4-73 தேதி தோழர் எஸ். சுப்பையா தலைமையில் கீழராஜகுலராமன் ஊரில் பாதயாத்திரை புறப்பட்டு சுமார் 20 இராமங்கள் சென்று 19-4-72 தேதி தோழர்கள் சீ. நம்மாழ்வார் எஸ். சுப்பையா தலைமையில் ஸ்ரீவில்லிபுத்தூர் தாசில்தார் ஆபீஸ்முன்பு ஆர்ப்பாட்டம் செய்து மகஜர் கொடுக்கப்பட்டது. பாதயாத்திரை குழுவுக்கு வத்ருப், கூமாப்பட்டி, ராமசந்திரபுரம், புதூர், முதலிய இடங்களில் உணவு கொடுத்து உபசரித்தார்கள்.

## கோவை லெட்சுமிமெசின் ஒர்க்சில் பழிவாங்கலை எதிர்த்த போராட்டம்

கோவை, ஏப். 12—

பெரியநாயக்கன்பாளையம் லட்சுமி மெஷின் ஒர்க்ஸ் தொழிலாளர் சென்ற மார்ச் 6-ம் தேதியில் இருந்து பழிவாங்குதலை எதிர்த்தும், மற்றும் உள்ள சம்பள கோரிக்கைகளை ஒட்டியும் வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர். போராட்டத்தை உடைக்க மேனேஜ்மெண்ட் எடுத்த சகலமுயற்சிகளையும் தொழிலாளர்கள் முறியடித்தனர்.

ஏப்ரல் 3-ல் இப்போராட்டத்திற்கு ஆதரவாக 700 இஞ்சினீயரிங் தொழிலாளர்கள் சி. ஐ. டி. யு. தலைமையில் உள்ள இஞ்சினீயரிங் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் பெரியநாயக்கன் பாளையத்தில் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தினர். இதை ஒட்டி பெரியநாயக்கன் பாளையம் சந்தைத் திடலில் நடைபெற்ற தொழிற்சங்க பொதுக் கூட்டத்திற்கு தோழர் யு. கே. ஜெகநாதன் தலைமை வகித்தார். 2000 பேர் திரண்ட அக் கூட்டத்தில் தோழர்கள் கே. ரமணி, டி. பாலன் ஆகியோர் பேசினர்.

இதைத் தொடர்ந்து 6–3–72ல் சி ஐ டி யூ, தி.மு.க. சங்கங்களைச்சேர்ந்த தொழிலாளர்களின் கூட்டான ஊழியர்கள் கூட்டம் பெரிய நாயக்கன் பாளையத்தில் நடைபெற்றது 200க்கு மேற்பட்டோர் பங்கெடுத்தனர். இதைத்தொடர்ந்து இரு சங்கங்களின் சார்பாக நடவடிக்கை மேற்கொள்வது என முடிவு செய்யப்பட்டு கூட்டு போராட்டகமிட்டி அமைத்தனர். போராட்டம் தீவிரப்படுத்தப்பட்டுள்ளது.

### ஆர்ப்பாட்ட ஊர்வலம்

ஏப். 7-ந்தேதி காலை 7 மணிக்கு கம்பெனி கேட்டு முன் 700 பேர் கொண்ட கூட்டத்தில் சி ஐ டி யூ சார்பில் தோழர் டி பாலனும், தி மு க. சார்பில் தோழர் மாரியப்பனும் போராட்டத்தை உறுதிப்படுத்த வேண்டிய அவசியத்தைப் பற்றிப் பேசினர். கூட்டம் முடிந்து அக்கூட்டத்தில் உள்ள அத்தனை தொழிலாளர்களின் ஒன்றுபட்ட ஊர்வலம் பெரியநாய்க்கன் பாளையத்தில் நடைபெற்றது.

ஏப். 10-ல் காலை 7 மணிக்கு கம்பெனி கேட் முன்பு நடைபெற்ற கூட்டத்தில் கோவை மாவட்ட கமிட்டியின் செயலாளர் தோழர் ஆர். வெங்கிடு, இஞ்சினீயரிங் தொழிற் சங்கச் செயலாளர் தோழர் டி பாலன் (சி ஐ டி யூ) திமுக சங்க சார்பில் தோழர் மாரியப்பன் ஆகியோர் பேசினர்.

### கலெக்டர் அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம்

அன்று கூட்டம் முடிந்ததும் சுமார் 300-க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் (சி ஐ டி யூ, தி மு க) பெரிய நாய்க்கன் பாளையத்தில் இருந்து 12 மைல் தூரம் ஊர்வலம் வந்து கலெக்டர் காரியாலயம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்து கோரிக்கை மகஜர் சமர்ப்பித்தனர். மாவட்ட கலெக்டரிடம் தோழர் டி பாலனும், திமுக சங்க தோழர் மாரியப்பனும் பேச்சு வார்த்தை நடத்தி உடன் பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தினர். கலெக்டர் விபரத்தை சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரிவித்து நடவடிக்கை எடுக்கச் செய்வதாகக் கூறினார்.

இதற்கு மத்தியில் உண்ணாவிரதம் இருந்த 3வது கோஷ்டியைச் சேர்ந்த தோழர்கள் (கலெக்டர் காரியாலயம்கம்பெனிகேட் முன்பு) 9–4–72ல் கைது செய்யப்பட்டனர். இதைத் தொடர்ந்து 4வது கோஷ்டியினர் அன்றே அதே இடத்தில் உண்ணாவிரதம் இருக்கின்றனர்.

### வலதுகளின் துரோகம்

போராடும் தொழிலாளர்களுக்கு ஆதரவு திரளுகிறது போராடும் தொழிலாளர்கள் தினசரி வார்டு வார்டாகசென்றும். கிராமங்களுக்குச் சென்றும் பிரச்சார இயக்கத்தை நடத்திவருகின்றனர்.

இப் போராட்டத்தில் வலதுசாரிகள் துரோகம் செய்தனர். இதை அறிந்த அத் தொழிலாளர்கள் 50 பேர்களுக்குமேல் வலதுசங்கத்திலிருந்துவிலகி லெட்சுமி மெசின் முக்கிய ஊழியரான தோழர் டி. பாலசுப்ரமணியம் தலைமையில் சி. ஐ. டி யூ. சங்கமான இஞ்சினியரிங் சங்கத்தில் சேர்ந்து செயல்பட்டு வருகின்றனர்.

## வந்தவாசி மின் ஊழியர் சங்க கூட்டம்

வந்தவாசி, ஏப். 14—

வடஆற்காடு மாவட்டம் வந்தவாசி தாலுகா மின்சார ஊழியர் சங்கக் கிளை (சி. ஐ. டி. யூ) கூட்டம் ஏப். 6ந் தேதி இங்கு நடைபெற்றது.

விருத்தாசலம் தோழர் என் எஸ். விஸ்வநாதன் தலைமைவகித்தார்.

தமிழக அரசின் தொழிலாளர் விரோத கொள்கையைக்கண்டித்தும், சர்க்கரை கார்டு கொடுக்கும்பொழுது கட்டாய நிதி வசூல் செய்வதைக் கண்டித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. வேலூர் தோழர் வி. எம் ராமலிங்கம் தொழிற்சங்கத்தின் விதிமுறை பற்றியும் சங்கத்தின் நோக்கம் பற்றியும் தெளிவாக எடுத்துக் கூறினார்.

## மார்க்சிஸ்ட் கட்சியுடன் இணைந்து கூட்டு இயக்கம்
### சோசலிஸ்ட் தலைவர் மதுலிமாயி ஆதரவு

பூனா, ஏப் 13—

மார்க்சிஸ்ட் கட்சியுடன் இணைந்து கூட்டு இயக்கம் நடத்துவதற்கு சோசலிஸ்ட் கட்சித் தலைவர் மதுலிமாயி ஆதரவு தெரிவித்தார்.

மார்க்சிஸ்ட் கட்சியுடன் சேர்ந்து நடத்தும் பேரியக்கம் இந்த நாட்டு "அரசியலில் ஒரு எழுச்சி" என்று குறிப்பிட்டார்.

அவர் மேலும் கூறுகையில் வரும் 16, 17 தேதிகளில் டெல்லியில்கூடவிருக்கும் கட்சியின் கொள்கை நிர்ணய குழுவின் கூட்டத்தில் இதுபற்றி பேசப்போவதாகக் குறிப்பிட்டார்.

கட்சியின் அரசியல் அமைப்பை வெகுஜனங்களை திரட்டுவதின் அடிப்படையில் மாற்றுவதற்கு ஒரு புதிய திட்டத்தை அக்கூட்டத்தில், தான் முன்வைப்பதாக குறிப்பிட்டார்.

தொழிலாளர்களுக்கு ஆதரவாக இருக்கும் கட்சியின் கொள்கைகளை, நடைமுறைக்கு கொண்டுவர இது தான் தக்க தருணம் என்று திரு மதுலிமாயி குறிப்பிட்டார்.

## மதுரை மாநகராட்சி பொறியியல் தொழிலாளர் பேரவை

மதுரை, ஏப். 14—

மதுரை மாநகராட்சி பொறியியல் தொழிலாளிகள் பேரவைக் கூட்டம் 8-4-72ம் தேதி மதுரை ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியனில் நடைபெற்றது கூட்டத்துக்கு தோழர் ஆறுமுகம் தலைமை வகித்தார்.

கூட்டத்தில், ரோடுரோலர் பிட்டர் கூலிகள், மோட்டார் அட்டெண்டர்கள் ஆகிய பிரிவுகளை சேர்ந்த 200 க்கும் அதிகமான தொழிலாளர்கள் கலந்து கொண்டனர்.

தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஆதரித்தும் கோரிக்கைகளைப் பெறுவதற்கு தொழிலாளர்கள் அனைவரும் ஒற்றுமையாயிருக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியும் தோழர்கள் வி காசிமேகம், டி. கே முரளீதரன், பி. சுந்தரராஜ். (மாநகராட்சி தொழிலாளர் சங்கச் செயலாளர்) ஆகியோர் பேசினர்கள்.

### தீர்மானங்கள்

ரோடு பராமரிப்புப் பிரிவில் தொடர்ச்சியாக 6 மாதத்திற்கு மேல் வேலை செய்துவரும் தொழிலாளர்களை நிரந்தரமாக்க வேண்டும்.

தொழிலாளர்களுக்கு தற்போது வழங்கி சம்பளம் ரூ 2—90 ஐ மாற்றி. நாள் ஒன்றுக்கு ரூ 4—00 வீதம் 26 நாட்கள் வேலைக்கு 30 நாட்கள் சம்பளம்என்ற அடிப்படையில் ஊதியம் வழங்க வேண்டும்.

வார, பண்டிகை விடுமுறைகளும் விடுமுறைநாட்களுக்கு பணி புரிந்தால் இரட்டிப்புச் சம்பளமும் வழங்கவேண்டும்.

பராமரிப்புப்பிரிவில் தேவையான தொழிலாளர்களை நியமிக்க வேண்டும்.

மாநகராட்சியின்சகலபிரிவுகளுக்கும் தேவைப்படும் போது, பல ஆண்டுகளாக தினக் கூலியாக வேலை செய்துவரும் ரோடு பராமரிப்புத் தொழிலாளர்களுக்கு முதலிடம் அளிக்க வேண்டும்.

இத்தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு மாநகராட்சி அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்டன.

## செருப்பு தைக்கும் தொழிலாளர் கைது கோவையில் போலீஸ் கெடுபிடி

கோவை, ஏப் 14—

சாலையோரங்களில் செருப்பு தைத்து பிழைத்து வரும் அரிஜன தொழிலாளர்களைப் போலீசார் கைது செய்துள்ள அக்கிரமம் கோவையில் நடந்துள்ளது. இதுபற்றிய விபரமாவது:-

கோவை நகரம் முழுதும் உக்கடம், காந்திபுரம், கரும்புக்கடை, வட கோவை சுக்குராரப்பேட்டை, உப்பிலிபாளையம், ரெயில்வே டேஷன், ஜெயில் ரோடு, பனையசுக்கம் ஆகிய பகுதிகளில் அரிஜன செருப்புத் தைக்கும் தொழிலாளர்கள் பல ஆண்டு காலமாக ரோடு ஓரங்களில்படடறை வைத்து செருப்பு தைத்து பிழைத்து வருகிறார்கள் அதில்கிடைக்கக்கூடிய சிறிய தொகையைக் கொண்டுதான்வாழ்க்கை நடத்திவருகிறார்கள்.

4—4—72-ம் தேதி காலையில் நகர போலீஸ் அதிகாரிகள் சுமார் 50 தொழிலாளர்களுக்கு மேற்பட்டோரை கைது செய்தது மட்டுமல்லாமல் அவர்களுடைய செருப்புதைக்கும் சாமான்களையும் பறித்துக் கொண்டு சென்றுள்ளனர்.

தற்பொழுது நாட்டில் உள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தினால் வேலை அற்றிருக்கும்—விலைவாசி உயர்வால் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கும் அரிஜன தொழிலாளர்கள் வாழமுடியாமல் அல்லல் பட்டுக்கொண்டு இருக்கும் நேரத்தில்—கோவை நகரத்தில் இந்நிகழ்ச்சி நடைபெற்றுள்ளது இந்த தொழிலாளர்கள் கைதுசெய்யப்பட்டு அபராதமும் விதிக்கப்பட்டுள்ளனர்.

இம்மாதிரியான நடவடிக்கைகள் தொடர்ந்து கோவை நகரத்தில் நடந்து கொண்டுவருகின்றன இந்த நடவடிக்கையிலிருந்து அரிஜன தொழிலாளர்களுக்கு பாதுகாப்புகொடுத்து வாழ்வதற்கு வழி செய்யவேண்டுமென்று தமிழக அரசை செருப்பு தைக்கும் அரிஜன தொழிலாளர்கள் கேட்டுக் கொண்டுள்ளார்கள்.

இந்த காட்டு தர்பார் நடவடிக்கையைப் பார்த்து கோவை நகரமக்கள்பெரும் அதிருப்தி அடைந்துள்ளார்கள். —நி

## ஆசிரியருக்கு...

### இரட்டணைக்கு குடிதண்ணீர் வசதி செய்திடுக

ஐயா,

தென்னாற்காடு மாவட்டம் திண்டிவனம் வட்டம் மயிலம் பஞ்சாயத்து யூனியனில் இருக்கும் எங்கள் ஊரான இரட்டணை பேரூர் கிராமத்தில் நீண்ட நெடுங்காலமாக, குடி தண்ணீர் வசதி செய்து தரப்படவில்லை

சுமார் ஏழு ஆயிரம் ஜனத்தொகை கொண்ட இக்கிராமத்திற்கு இன்னும் குடிதண்ணீர் வசதியை செய்து தராமல் பஞ்சாயத்தும், பஞ்சாயத்து யூனியனும், நகராட்சியும், அரசும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளும், அரசியல் முன்னணித் தலைவர்களும், பஞ்சாயத்து, பஞ்சாயத்து யூனியன் தலைவர்களும், நகராட்சி தலைவரும் இருந்து வருகிறார்கள்.

இரட்டணையைப் போன்று ஏராளமான பேரூர்களையும் குக்கிராமங்களையும், குடிதண்ணீருக்குக்கூட வழியில்லாமல், அதற்கான ஏற்பாட்டை, வசதியைக்கூட செய்து தராமல்—செய்துதர முடியாமல் மௌனமாக இருப்பது—புறக்கணித்துவிட்டு அலட்சியமாக இருப்பது அவ்வளவு நல்லது அல்ல என்று நான் ஏனைய பொதுமக்களின் சார்பில் கூற விரும்புகிறேன்.

உடனடியாக சம்பந்தப்பட்ட அரசு அதிகாரிகளும், பஞ்சாயத்து தலைவர்களும் நகராட்சித் தலைவர்களுமாகச் சேர்ந்து விரைவில் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் குடி தண்ணீர் வசதியை மக்கள்பெற ஆவன செய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன் இதில் அரசும் தலையிட்டு சம்பந்த பட்டப் அதிகாரிகளுக்கும், இலாக்காவுக்கும் பஞ்சாயத்து தலைவருக்கும் பஞ்சாயித்து யூனியன் தலைவருக்கும் அதிகார பூர்வமான உத்தரவை அனுப்பி இதை உடனே நிறைவேற்றிட சகல நடவடிக்கை களையும் எடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்

இவண்,
செ. சிவஞானம்
இரட்டணை.

## அசோக் லேலண்ட் தொழிலாளருக்கு ஆதரவு ஊர்வலம்

சென்னை, ஏப். 14—

இங்கு ஏப்ரல் 10ல் எண்ணூரில் உள்ள அசோக் லேலண்ட் தொழிலாளர்கள் கோரிய நியாயமான போனஸை கொடுக்க மறுத்துவரும் நிர்வாகம் தற்போது சம்பளம் இல்லாத லே—ஆப்பையும் தொழிலாளர்கள் மீது திணித்துள்ளது இந்தக் கொடுமையை எதிர்த்து போராட்டம் நடத்தும் அத்தொழிலாளர்களுக்கு ஆதரவாக ஏப் 10ந் தேதி திருவொற்றியூர் மார்க்சிஸ்ட் கம்யூ. கட்சி சார்பில் ஆதரவு ஊர்வலம் நடந்தது. அன்று மாலை 5 மணிக்கு டோல்கேட்டில்இருந்து200 பேர்களுக்கு மேற்பட்ட தோழர்கள் ஊர்வலம் சென்று கம்பெனி வாசல் முன் உண்ணாவிரதம் இருக்கும் பந்தலை அடைந்தனர். மாவட்டக் கமிட்டி மெம்பர் கனகசபை குப்புசாமி, க. பதிமநாபன் மற்றும், சென்னை–செங்கை இணைப்புக்குழு செயலாளர் பகாவிந்தராசன், திருநாவுக்கரசு ஆகியோர் ஆதரவு தெரிவித்துப் பேசினர்.

## உடுமலையில் இடைநிலை ஆசிரியர் அமைப்புக்கூட்டம்

உடுமலை, ஏப் 14—

உடுமலை வட்ட உயர் நிலைப்பள்ளி இடைநிலை ஆசிரியர் கழக அமைப்புக் கூட்டம், உடுமலை அரசினர் உயர்நிலைப் பள்ளியில் திரு. கே. எஸ். நடேசுவரன், தலைமையில் நடைபெற்றது. அதில் செயற்குழு தேர்ந்தெடுக்கப்பெற்றது

கே. நச்சிமுத்து—தலைவர் எஸ். ஏ, ரகுமான்—துணைத்தலைவர், ஜி.கே திருமலைசாமி — செயலாளர், எம். சங்கரய்யா—துணைச் செயலாளர், பொருளாளர்—யு.பி. கருப்புசாமி, ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாவட்டப் பிரதிநிதிகளாக எம் கோபாலகிருஷ்ணன், டி. ஆர். முக்கி, பி. சிவராஜ் ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பெற்றனர்

மற்றும் பள்ளிக்கு ஒருவர் வீதம் 17 செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்,

செயலாளர் திரு ஜி,கே. திருமலைசாமி நன்றி கூறினார்.

### செயற்குழு கூட்டம்

பின்னர் இடைநிலை ஆசிரியர் கழகச் செயற்குழு 26—3—72-ல் உடுமலை அரசினர் உயர் நிலைப் பள்ளியில் தலைவர் திரு. கே. நச்சிமுத்து தலைமையில்கூடியது. பின்வரும் தீர்மானங்களை நிறைவேற்றியது,

ஆசிரியர்களைப் போதனையல்லாத பிற பணிகளில் ஈடுபடுத்தக்கூடாது,

இடைநிலை ஆசிரியர் ஊதிய விகிதத்தை 275—10—375—15—450 என மாற்றியமைக்க வேண்டும்.

தேர்வு நிலை 10ஆண்டுகள் ஊழியம் செய்த எல்லோருக்கும் அளிக்க வேண்டும் இடைநிலை ஆசிரியர்களுக்கு 2 தேர்வு நிலைகள் அளிக்கவேண்டும்

இடைநிலை ஆசிரியர்கள் எந்நிலையில் பணியாற்றினாலும் இடைநிலை ஆசிரியர் ஊதிய விகிதம் அளிக்க வேண்டும் பி டி தகுதி பெற்ற இடைநிலை ஆசிரியர்கள், இடைநிலை வகுப்புகளுக்குப் போதித்தாலும் பட்டதாரி ஆசிரியர் ஊதிய விகிதம் வேண்டும்

மருத்துவ உதவித் தொகை 10 சதவீதம் மாத ஊதியத்துடன் வேண்டும்

ஆசிரியர் எல்லோருக்கும் 10 சதவீதம் வீட்டு வாடகைப்படி வேண்டும் முதலிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன

செயலாளர் திரு ஜி கே. திருமலைசாமி நன்றி கூறினார்.

## அரூர் வட்ட ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் துவக்கம்

அரூர், ஏப். 14—

அரூர் வட்ட ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் அமைப்பு கூட்டம் 6-4-72-ந் தேதி தோழர் சின்னப்பன் தலைமையில் நடைபெற்றது கூட்டத்தில் எம். வேடியப்பன், எச் ஆர் கணேசன் எம் அண்ணாமலை, ஆர் குப்புசாமி ஆகிய தோழர்கள் தொழிற்சங்கத்தின் விதிகளையும் தோழர்களின் ஒற்றுமையையும் பற்றிப் பேசினார்கள்,

சேலம்—தர்மபுரி மாவட் செயலாளர் கே எஸ். அர்த்தனாரி பேசுகையில் தொழிலாளர்கள் அனைவரும் அரசியல் ரீதியாகவும் ஸ்தாபன ரீதியாகவும் ஒன்றுபட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அரூர்வட்டார ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் சங்கத்திற்கு தலைவராக கே. மாரி, உபதலைவராக எஸ். சின்னப்பன் செயலாளராக எம் அண்ணாமலை துணைச் செயலாளராக சித்தய்யன், பொருளாளராக பெரியண்ணன் ஆகியோரும் கமிட்டிமெம்பர்கள் 10 பேர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## திருப்பத்தூரில் கைது செய்யப்பட்ட சர்வ கட்சியினர் விடுதலை

திருப்பத்தூர், ஏப். 13—

திருப்பத்தூர் கல்லூரி நிர்வாகியின் ரௌடித் தனத்தைக்கண்டித்து நடைபெற்ற ஆர்ப்பாட்டத்தின் போது கைது செய்யப்பட்ட 267 பேரும் விடுதலை செய்யப்பட்டனர்,

விடுதலை செய்யப்பட்டவர்களில் மார்க்சிஸ்ட் கட்சி, ஸ்தாபன காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் கட்சி, இந்திரா காங்கிரஸ் ஊழியர்களும், தலைவர்களும் உள்ளனர்.

திருப்பத்தூர் கல்லூரி நிர்வாகி குண்டர்களை ஏவிவிட்டு மாணவர்களை தாக்கினார் இதைக் கண்டித்து சர்வ கட்சியினரைச் சேர்ந்தவர்களையும் படுமுறுத்தி தாக்கியுள்ளார். இதைப் பற்றி போலீசில் புகார் செய்தும் ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

நிர்வாகியின் ரௌடித் தனத்தையும், போலீசின் மௌனத்தையும்கண்டித்து அனைத்துக் கட்சியினரும் ஆர்ப்பாட்டம் செய்தனர் ஆர்ப்பாட்டம் செய்த அனைவரும் கைது செய்யப்பட்டனர்.

இதை கண்டு அப்பகுதி மக்கள் கொதிப்படைந்தனர். திருப்பத்தூர் பகுதியில் பதட்டநிலைமை நிலவியது. பொது மக்களின் ஆத்திரத்தைக் கண்ட தமிழக அரசு கைது செய்யப்பட்ட அனைவரையும் விடுதலை செய்ய உத்தரவிட்டுள்ளது.

சர்வகட்சித்தலைவர்களைத் தாக்கியதாக மூவரைக் கைதுசெய்து மேலும் புலன் விசாரணை செய்து வருவதாக போலீஸ் தரப்பில் கூறப்பட்டுள்ளது.

## அரக்கோணம் உருக்கு ஆலை உற்பத்திக்குத் தயார்

சென்னை, ஏப். 10—

சென்னைக்கருகே அரக்கோணத்தில் நிறுவப்பட்டிருக்கும் தொடர் உருக்கு வார்ப்பாலை, இரும்புப் பாளங்களை உற்பத்தி செய்வதற்குத் தயாராக உள்ளது. இவ்வாலை சோவியத் உதவியுடன் கட்டப்பட்டதாகும். இதுவரை நடத்தப்பட்ட பல பரீட்சார்த்த உற்பத்திச் சோதனைகள் வெற்றிகரமாக நடந்தேறியுள்ளன. இந்த உருக்கு வார்ப்பாலை பலவகைகளிலும் புதுமையானது. புனைவரையிலும், அமைப்பிலும் மிக நவீனமானது. தமிழகத்தின் பொருளாதாரத்தில் இந்த ஆலை நிச்சயமாகக் குறிப்பிடத்தக்க பங்கு பெறும் என்பது உறுதி. இந்த ஆலைக்கான 2 கோடி ரூபாய் பெறுமானமுள்ள நவீன எந்திரங்களும், தொழில் நுட்ப உதவியும், சோவியத் யூனியனில் இருந்து பெறப்பட்டவையாகும். 'மெஷினோ எக்ஸ்போர்ட்' என்ற சோவியத் நிறுவனம் அவற்றை வழங்கியுள்ளது நீண்டகாலத் தவணையில், நம் நாட்டுச் செலாவணியிலேயே இக்கடனை நாம் திருப்பச் செலுத்தலாம்.

மேலும் ஒரு மின்சார உலை நிறுவப்படுவதற்கான திட்டம் உள்ளது என்றும், அவ்வாறு நிறுவப்படும் போது ஆண்டொன்றுக்கு தற்போது உற்பத்தி செய்யப்படும் 50 000 டன் பாளத்திற்குப்பதிலாக, 100,000 டன் உற்பத்தி செய்யமுடியும். இந்த ஆலைக்குத் தேவையான இரும்புக் கழிவுகளை இடையறாது கொடுத்துதவவும், அதனருகே, 'ஸ்பாஞ்ச்' இரும்பு ஆலைத் தயாரிப்பதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டுவருகிறது.

இவ்வாலையில் பணியாற்றும் சோவியத் என்ஜினீயர்களின் தலைவரான வி. எம் திமோஃபியேவ், சோவியத் யூனியன் அளித்துள்ள இந்த எந்திரங்களின் விசேட அம்சங்கள்பற்றி எடுத்துரைத்தார். முழுவதும் தனியக்க நுணுக்கத்துடனும், டெலிவிஷன் வசதிகளுடனும் பொருத்தப்பட்ட தொடர் உருக்கு வார்ப்பாலை, இந்தியாவிலேயே தற்போது இது ஒன்றுதான் என்று கூறினார் அவர் இந்த ஆலையின் எல்லா நடவடிக்கைகளையும் கட்டுப்பாட்டு அறையிலிருந்தே இயக்கலாம்.

விரைவில் இந்த ஆலை வர்த்தக ரீதியில் உற்பத்தியைத் தொடங்கும்.

## கேரள பொதுப்பணி துறை தொழிலாளர் வேலைநிறுத்தம்

மூணாறு ஏப். 14—

கேரளப் பொதுப்பணித் துறையில் பணிபுரியும் என். எம். ஆர். தொழிலாளர்கள் அனைவரும் ஏப் 10-ந் தேதி முதல் வேலைநிறுத்தத்தில் இறங்கியுள்ளனர், போராட்டம் வெற்றிகரமாக நடந்துவருகிறது.

இப்போராட்டத்தின் நோக்கம் குறித்து 9-4-72-ந் தேதி பகலில் மூணாறுநகரில் பொதுக்கூட்டம் நடந்தது. மார்க்சிஸ்ட் கட்சியின் மூணாறு கட்சி செயலாளர் தோழர் எஸ் குசைமாணிக்கம் தலைமைவகித்தார் அவர் பேசும்போது மேற்கு வங்கத்தில் இந்திராவின் பாசிசப் போக்கைக் கண்டித்தார்.

பொதுப்பணித் துறை என். எம். ஆர். தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் ஜே சர். சாவேலி கோரிக்கைகளை விளக்கிப் பேசினார். டி. இ. இ. யூனியன் உபதலைவர் தோழர் பி. ஆறுமுகம் வேலை நிறுத்தப் போராட்டம் குறித்தும், கண்ணன் தேவன் கம்பெனி தொழிலாளர் போராட்டம் பற்றியும் பேசினார்.

மற்றும் பலர் பேசினார்கள்.

## தாராபுரத்தில் வங்கி ஊழியர் நிர்வாகிகள் தேர்வு

தாராபுரம், ஏப். 13—

கோவை மாவட்டத்தில் உள்ள கூட்டுறவு நகரவங்கி ஊழியர்களின் கூட்டம், தாராபுரத்தில் அண்மையில் நடைபெற்றது.

மாவட்டத்தின் பல்வேறு நகரங்களிலிருந்து ஏராளமான பிரதிநிதிகள் வந்து கலந்துகொண்டனர். திரு டி. ஒய் டி. எம் அன்சாரி அனைவரையும் வரவேற்றார்.

சங்கத்திற்குதிரு சி எஸ். விஸ்வேஸ்வரன் கௌரவத் தலைவராகவும், சங்கத் தலைவராக திரு, எம். பாசீத் முல்க்கும் துணைத் தலைவர்களாக திரு. டி. சுந்தரம், திரு. கே. கே. பொன்னுசாமியும்,பொதுச் செயலாளராக திரு சி.பி. கதிரேசனும் துணைச் செயலாளர்களாக திரு. எம். வெங்கடேசன், திரு எஸ், வெங்கடாச்சாரி, திரு என். கிரிஆறுமுகம், பொருளாளராக திரு. சங்கநாதன் ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். செயற்குழுவுக்கு திருவாளர்கள ஈ. நாகையா, டி. வி. டி எம். அன்சாரி, கே. எஸ். ராமச்சந்திரன், தேவராஜ், வி. செந்திவேல், வால்பாறை ஆர். ராஜ்குமார் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

"கோவை மாவட்டக் கூட்டுறவு நகர வங்கி ஊழியர்கள் சங்கம்" ஒன்று துவக்குவதென முடிவு செய்யப்பட்டது.

திரு எம். பாசித் முல்க் அவர்கள் நன்றி கூறினார்.

# தமிழக விவசாயிகள் ஆர்ப்பாட்டங்கள்

மதுரை—ஏப்-10

தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க, நிலவெளியேற்றத்தை எதிர்த்தும் மற்றும் பல கோரிக்கைகளை வற்புறுத்தியும் ஏப்ரல் 10-ஆம் நாள் மாநிலம் முழுவதும் விவசாயிகளின் ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன. அவைகளில் சில வருமாறு:

### தர்மபுரியில்

தர்மபுரி வட்டத்தில் விவசாயிகள் சங்கத் தூதுக்குழு ஏப்ரல் 10-ம் தேதி அன்று கலெக்டரைச் சந்தித்து விவசாயிகளின் கோரிக்கைகளடங்கிய மகஜரை அளித்தது.

தமிழகம் முழுவதும் விவசாயிகளுக்கு பொதுவாக உள்ள இக்கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டியதன் அவசியத்தை வற்புறுத்திப் பேசினர்.

கோரிக்கை மகஜரை மாநில அரசுக்கு அனுப்பி ஆவன செய்வதாக கலெக்டர் தூதுக்குழுவிடம் உறுதி அளித்தார்.

### சேலத்தில்

சூரமங்கலம் கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்தின் முன்பிருந்து, 200-க்கு மேற்பட்ட விவசாயிகளும் தொழிலாளர்களும் தோழர் கே. எஸ் ஆர்த்தனாரி தலைமையில் 10-4-72-ல் ஊர்வலமாகக் கிளம்பி, சேலம் ராஜேந்திரா சத்திரம் சென்றனர்.

அங்கு சேலம் நகரதொழிலாளர்களும் சேர்ந்துகொண்டு மாபெரும் ஊர்வலமாகப் புறப்பட்டு செவ்வாய்பேட்டை வழியாக முக்கிய வீதிகளில், கோரிக்கைகளை முழங்கிக்கொண்டு சென்றனர்.

### கலெக்டர் அலுவலகம் முன்

கலெக்டர் அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம் செய்தனர். தோழர் கே. எஸ். அர்த்தனாரி மற்றும் பி கந்தசாமி, ஏ. கந்தசாமி, பழனியப்பன், ஆர். பி அந்தோணிசாமி ஆகியோர் கலெக்டரிடம் மகஜர் கொடுத்துப் பேசினார்கள்.

### அழகாபுரத்தில்

அழகாபுரத்தில் 7-4-72ல் தோழர் எம. மாரியப்பன் தலைமையில் விவசாயிகள் சங்க பொதுக்கூட்டம் நடந்தது. தோழர்கள் பெரியதம்பி, ஏ. கந்தசாமி ஆகியோர் விவசாயிகள் கோரிக்கைகள் பற்றியும், மத்திய, மாநில அரசுகளின் போக்குகளைக் கண்டித்தும் பேசினார்கள்.

### கொல்லி மலையில்

சேலம், ஏப். 13—

கொல்லிமலை விவசாயிகள் 200 பேர் 9—4—72-ல் தோழர் வி.கே ராஜு தலைமையில் பாதயாத்திரையாக நாமக்கல்லுக்குவந்து கோட்டாட்சித் தலைவர் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்தினார்கள்.

அன்று இரவில் பாதயாத்திரைத் தோழர்களுக்கு காளப்பநாயக்கன்பட்டியில் சிறப்பானதோர் வரவேற்பு அளிக்கப்பட்டது. அங்கு நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர்கள் டாக்டர் துரைசாமி, வி. ரங்கராஜன், கே. எல். சீரங்கன் ஆகியோர் வரவேற்றுப் பேசினார்கள்.

### ஆர்ப்பாட்டம்

மறுநாள் 10-ந் தேதியன்று நாமக்கல் முக்கிய வீதிகளில் ஊர்வலமாக வந்து ஆர். டி. ஓ அலுவலகம் முன்னால் 10 அம்சக் கோரிக்கைகளை முழக்கி ஆர்ப்பாட்டம் நடத்தி விண்ணப்பம் கொடுத்தபின், நாமக்கல் பாறையில் தோழர் வி. ரங்கராஜன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது.

கூட்டத்தில் தோழர்கள் கே.எஸ் அர்த்தனாரி, டாக்டர் துரைசாமி, கே எஸ். சீரங்கன், பழனிச்சாமி, கு. சின்னப்பா பாரதி மற்றும்பலர் விவசாயிகள் சங்கத்தின் 10 அம்சக் கோரிக்கைகளை விளக்கியும் இன்றைய அரசியல் நிலை குறித்தும் பேசினார்கள்.

### போடியில்

போடியிலிருந்து விவசாயிகள் ஆர்ப்பாட்ட அணிவகுப்பு பெரும் முழக்கத்துடன் கிளம்பியது.

நூற்றுக்கும் அதிகமான விவசாயிகள் ஒரு லாரியில் தோழர்கள் எம். ராமர், சிவனு தலைமையில் புறப்பட்டுச் சென்றனர்.

செர்புக்குத்தி உலவங்குடி காட்டு நிலங்களை விவசாயிகளுக்குப் பட்டா போட்டுக் கொடு! நில வெளியேற்றத்தை ரத்து செய்! என்று முழக்கமிட்டுச் சென்றனர்.

### உத்தம பாளையத்தில்

ஊர்வலத்தினர் மேலச் சொக்கநாதபுரம், சில்லுமரத்துப்பட்டி, சிலமலை, பசிவகாபுரம், லெட்சுமி நாயக்கன்பட்டி வழியாக உத்தமபாளையம் வந்தடைந்தனர்.

உத்தமபாளையம் முக்கிய வீதிகளின் வழியாக நூற்றுக்கணக்கான விவசாயிகள் ஊர்வலமாகச் சென்று தாசில்தார் அலுவலகத்தை அடைந்தனர்.

விரிவான நிலச்சீர்திருத்தம் வேண்டும் என்பன போன்ற பல முக்கிய கோரிக்கைகளை வலியுறுத்தி விவசாயிகளின் சார்பில தாசில்தாரிடம் தோழர்கள் பி. ராமர், கே. ராஜப்பன், உசேன் மீர், அனிபா ஆகியோர் மகஜர் அளித்தனர். மகஜரைப் பெற்றுக்கொண்ட தாசில்தார் அரசுக்கு விவசாயிகளின் கோரிக்கைகளைத் தெரிவிப்பதாக உறுதியளித்தார்.

### உசிலம்பட்டியில்

உசிலம்பட்டி, ஏப், 12—

உசிலம்பட்டியில் ஏப்ரல் 10-ம் தேதியன்று ஆர் டி. ஓ. அலுவலகம் முன்பு விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் ஆர்ப்பாட்டம் செய்தனர் ஆர்ப்பாட்டத்திற்கு முன் நகரின் முக்கிய வீதிகளில்—கடன் நிவாரணச்சட்டம் — தேவை! லேவாதேவி கடன்களை ரத்து செய்! விவசாயக் கூலிகளுக்கு வீட்டடிமனை—கொடு! கூட்டுறவு. தேசிய வுடமை பேங்கு, மாநில அரசாங்க—கடன் வசூல்களை தள்ளி வை! முதலிய கோசங்களை எழுப்பிக் கொண்டு ஊர்வலமாக வந்து ஆர் டி. ஓ ஆபீஸ் முன்பு ஆர்ப்பாட்டம் செய்தனர்.

மனுவைப் பெற்றுக் கொண்ட கோட்ட ஆசிரியர் தலைவர், மாநில அரசுக்கு அனுப்பி வைப்பதாக உறுதி கூறினார்.

ஆர்ப்பாட்ட முடிவில் தாலுகா விவசாய சங்கச் செயலாளர் எம் ஏ. தமிழரசும், மார்க்சிஸ்ட் கட்சிச் செயலாளர் உ ச உலகப்பாவும் மக்களிடம் தமிழ் நாடு விவசாய சங்க கோரிக்கைகளை விளக்கி பேசினர்

## பிரச்சார பாதயாத்திரைகள்

### மேலூர் தாலுகாவில்

மேலூர் தாலுகாவில் விவசாயிகளின் கோரிக்கைகளை விளக்கிப் பிரச்சார பாத யாத்திரை ஏப் 5 முதல் 9 வரை நடைபெற்றது. மணப்பட்டிபிலிருந்து ஏப்ரல் 5-ம் தேதி தோழர் கு பக்தவத்சலம் தலைமையில் தோழர்கள் மு அய்யாவு, லெ சுப்பையா, அம்மாவாசி ப அய்யாவு, சேதுக்காளை ஆகியோர் பிரச்சார பாதயாத்திரை துவக்கினர்.

கச்சிராயன்பட்டி, பாளக்குடி கண்மாய்ப்பட்டி, பாப்பாக் குளம்பட்டி ஆகிய ஊர்களில் பிரசாரம் செய்து கட்டு ஊரவில் மேலவளவில் தங்கினர்.

ஏப்ரல் 7-ம் தேதி காலையில் புதுப்பட்டியிலிருந்து தொடங்கி, கலம்பட்டி, கலெம்பட்டி, அட்டப்பட்டசேரி, அட்டப்பட்டி பூதமங்கலம் பொட்டப்பட்டி, புரண்டிபட்டி, பனப்பட்டி முதலிய கிராமங்களுக்குச் சென்று பிரச்சாரம் செய்தனர்.

### கச்சிராயன் பட்டி

இங்கு யாருக்கும் நிலம் இல்லை தரிசுநிலங்களைக்கூட உழுவதற்கு முடியவில்லை எல்லா நிலங்களையும் மேல் சாதியினர் தங்கள் வசம் வைத்துள்ளனர் ஆண்களுக்கு கூலி ரூ 1.50 பெண்களுக்கு ரூ1-00 கூலியாக தரப்படுகிறது. இங்குள்ளவர்களுக்கு ஆறுமாதத்திற்கு ஒருமுறை தான் வேலை தரப்படுகிறது "எம்மதத்தினருக்கும் சமமான உரிமைகள் வழங்குவோம் என ஊரெல்லாம் முழக்கம் செய்து வரும் இவர்கள் காலத்தில் இங்கே சாதிக் கொடுமைகள்" மிகவும் மோசமாக உள்ளது. பல கிராமங்களில் குடிதண்ணீர் கூட கிடையாது.

ஏப்ரல் 6-ம் தேதி காலை மேலவளவு சேரியில் தொடங்கி வையாபட்டி, தாமரைப்பட்டி சாலக்கிபட்டி, தும்பைப்பட்டி ஆகிய கிராமங்களுக்கு பாதயாத்திரை குழுவினர். சென்று பிரச்சாரம் செய்தனர் தும்பைபட்டியில் இரவில் தங்கினர்

### கைலம்பட்டியில்

ஒரு ஹரிஜன விவசாயி தன் மகளுக்கு திருமணம் முடித்து, சீர்கொடுத்தனுப்பினர், இந்த புதுத் தம்பதிகள் ஊரினுடைய பொது வீதியில் சென்ற குற்றத்திற்காக, பஞ்சாயத்து வைத்து அரிஜன விவசாயியை கிராமத்திலுள்ளவர்கள் கண்டித்துள்ளனர். இந்த நிகழ்ச்சி பற்றி மேலூர் தாசில்தாரிடமும் புகார் செய்யப்பட்டுள்ளது.

### மதுரை வடக்கு தாலுகாவில் சைக்கிள் பிரச்சாரம்

மதுரை வடக்கு சக்கிமங்கலம் பகுதியில் ஏப். 5-ல் சைக்கிள் குழு தோழர் என் ராமு தலைமையில் பிரச்சாரம் நடைபெற்றது.

சக்கிமங்கலம் பகுதியில் கருப்பாயூரணி, புதுக்கோட்டையிலிருந்து வீரபாஞ்சான், ஒத்தப்பட்டி வரையுள்ள 22 ஊர்களில் பிரச்சாரம் செய்யப்பட்டது.

பொருசுப்பட்டி பகுதியில் பெருமாள்பட்டி, ஆரப்பாளையம் முதலிய ஊர்களிலிருந்து மாயாண்டிபட்டி. பூசாரிபட்டி வரையுள்ள 17 ஊர்களில் பிரச்சாரம் செய்யப்பட்டது

இக்கிராமங்களில் பிரச்சாரக் குழுவினருக்குச் சிறப்பான வரவேற்புகளும் உபசரிப்புகளும் அளிக்கப்பட்டன.

விவசாயிகளின் கோரிக்கைகள் பற்றியும் குத்தகை வஜா சட்டம் பற்றியும், விவசாயத்தில் இயந்திரங்கள் புகுத்தப்படுவதால் ஏற்படும் அபாயம் பற்றியும் விளக்கிப் பேசினர்.

### மதுரை நகரில்

மதுரை ஏப். 13—

மதுரை நகர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் 12, 13 22, 24 ஆகிய வார்டுகளைச்சேர்ந்த தோழர்களும் ஜெனரல் கிளை தோழர்களும் விவசாய தொழிலாளர்களின் கோரிக்கைகளுக்கு ஆதரவாக ஏப்ரல் 6-ந் தேதி முதல் 9-ந் தேதி வரை பிரசார பாதயாத்திரை செய்தனர்.

இந்தயாத்திரையில் 50 க்கும் மேற்பட்ட தோழர்கள் கலந்து கொண்டனர், குடும்பத்திற்கு 15 ஸ்டாண்டர்டு ஏக்கர் என உச்சவரம்பு கட்டு!" விவசாயத்தில் எந்திரத்தை புகுத்தாதே"! "குத்தகை விவசாயிகளை நிலத்தை விட்டு வெளியேற்றாதே!" போன்ற கோஷங்களை விண்ணதிற முழங்கினர்,

### 57 இடங்களில்

தோழர்கள் எம்.ராஜாங்கம், தி. காந்தி, காதர், எஸ். நம்பி, இரா. நாராயணன் நகரின் முக்கிய இடங்களில் விவசாயிகளின் கோரிக்கைகளை விளக்கியும் விவசாயிகளுக்கு நகர்புற மக்கள் ஆதரவளிக்கவேண்டிய அவசியம் குறித்தும், மொத்தம் 57 இடங்களில் பேசினர்.

ஆயிரக் கணக்கான மக்கள் கூடி பிரச்சாரத்தைக் கேட்டதுடன், உண்டியலில் நிதி அளித்தனர், கட்சிப் பிரசுரங்களும் வாங்கினர்.

### 38வது வார்டில்

மதுரை 38வது வார்டில் பிரச்சார பாதயாத்திரை 8—4—72ம் தேதி நடைபெற்றது. மக்களுக்கு பாட்டு(ஆர்மோனியபெட்டி) மூலமாகவும், பிரச்சாரம் மூலமாகவும் விவசாயிகளின் கோரிக்கைகள் மக்களுக்கு விளக்கப்பட்டன. திரளான மக்கள் கூடி உற்சாகமாக பங்கு கொண்டனர்.

### மேலூரில்

மேலூரில் ஏப்ரல், 13—

மேலூர் தாசில்தார் அலுவலகம் முன்பு ஏப் 10ல் மாபெரும் விவசாயிகள் கோரிக்கை ஆர்ப்பாட்டம் நடைபெற்றது தோழர்கள் பக்தவத்சலம் மு அழகர்சாமி, வெ சு அழகன் சின்னழகன், சேதுக்காளை சரு. உடையப்பன் ஆகியோர் தாசில்தாரைச் சந்தித்து மகஜர் கொடுத்தனர் மகஜரை கவனித்து அரசுக்கு அனுப்புவதாக தாசில்தார் கூறியுள்ளார். இறுதியில் விவசாயிகள் கூட்டம் நடத்தப்பட்டது.

## வாணியம்பாடியில் 8 கிராமங்களில் விவசாயிகள் சங்கம்

வாணிபம்பாடி,ஏப் 13—

வடஆற்காடு மாவட்டம் வாணியம்பாடி தாலுகாவில் பல கிராமங்களில் 8 9 தேதிகளில் விவசாயிகள் சங்க அமைப்புக்கூட்டங்கள் நடைபெற்றன.

மேட்டுப்பாளையம் கிராமம. பள்ளிப்பட்டு கிராமம் மதனஞ்சேரி எல்லையாகரம் மெ ஞானகுப்பம், அரப்பளங்குப்பம், சிகரனூர்குப்பம் பழைய வாணியம்பாடி ஆகிய ஊர்களில் விவசாயிகள் சங்க அமைப்புக் கூட்டங்கள் நடந்தன.

இக்கூட்டங்களில் விவசாயிகள் சங்கச் செயலாளர் ஏ ராஜு மார்க்சிஸ்ட் கட்சியின் செயலாளர் எஸ். டி. குசைநாதன், பீடித் தொழிலாளர் சங்கச் செயலாளர் எஸ். எம். அனிபா, தோல் பதனிடும் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த சி. அர்ச்சுணன், மற்றும் எஸ். சண்முகக் கவுண்டர், கே. வி, முனிசாமி, டி ரத்தினம் ஆகியோர் கோரிக்கைகளை விளக்கிப் பேசினர்.

## மூலக்காட்டில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்கூட்டம்

தர்மபுரி, ஏப். 14—

தர்மபுரி வட்டம் மூலக்காட்டில் மார்க்சிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம் தோழர் பிச்சையப்பன் தலைமையில் நடைபெற்றது கூட்டத்தில் தோழர் என் பழனிவேல், பி. மாரியப்பன் மற்றும் பலர் பேசினார்கள்.

## மதுரை மாநகராட்சி தொழிலாளி மரணம் மண்சரிந்து செத்த பரிதாபம்

மதுரை, ஏப். 14—

சாக்கடையைப் பழுது பார்க்க குழிதோண்டிக் கொண்டிருந்த நான்கு தொழிலாளர்கள் மீது மண் சரிந்து ஒருவர் மரணமடைந்தார் இது பற்றிய விவரமாவது:—

கடந்த 9-4-72 ம் தேதி இரவு 11 மணிக்கு மேல் மாரட்டு வீதியில் உள்ள 4 ம் நம்பர் பம்பிங்ஸ்டேஷன் சமீபம் கேங் தொழிலாளிகள் வேலை செய்து கொண்டிருந்தனர்,

சாக்கடையைப் பழுது பார்ப்பதற்காக பெரியகுழி தோண்டிக் கொண்டிருந்தனர். ரோடு கேங் தொழிலாளர்களான பழனி, சித்திரவேல் அழகன், துரைசாமி, ஆகிய நால்வரும் பெரிய குழி தோண்டிக் கொண்டிருந்தவர். இவர்களுக்குசாக்கடைப்பைபில் வேலை செய்து அனுபவமில்லை என்று கூறப்படுகிறது. வேலை பார்த்துக் கொண்டிருக்கையில் இவர்கள் மீது திடீரென்று மண் சரிந்துவிட்டது.

இதனால் இந்த நான்கு தொழிலாளிகளும் படுகாயமடைந்தனர். உடனே அவர்கள் ஆஸ்பத்திரிக்கு எடுத்து செல்லப்பட்டனர். வழியிலேயே பழனி என்ற தொழிலாளி இறந்து போனார். ஏனைய மூன்று தொழிலாளர்களும் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறார்கள்.

### இரங்கல் ஊர்வலம்

10–4-72 மாலை நடைபெற்ற பிரேத ஊர்வலத்தில் கருப்பு பாட்ஜ் அணிந்து ஏராளமான தொழிலாளிகள் கலந்து கொண்டனர்.

இறுதியில் நடைபெற்ற இரங்கல் கூட்டத்திற்கு தோழர் ஆறுமுகம் தலைமை வகித்தார்.

மாநகராட்சித் தொழிலாளர் சங்கச் செயலாளர் தோழர் ப. சுந்தரராஜ், உறுப்பினர்கள் வி. வீரபத்திரன் கே எஸ். சந்தானம், வாசர் (சூபர் வைசர்) ஆகியோர் பேசினர்.

### நட்ட ஈடு கோரிக்கை

மரணமடைந்த தொழிலாளியின் குடும்பத்துக்கு நஷ்ட ஈடும் அவரின் மனைவிக்கு மாநகராட்சியில் வேலையும் கிடைப்பதற்காக மாநகராட்சி தொழிலாளர் சங்கம் நடவடிக்கை எடுத்து வருகிறது.

## மார்க்சிஸ்ட் பொதுக்கூட்டத்தில் தி.மு.க. காலிகள் கலாட்டா

தர்மபுரி, ஏப் 13—

தர்மபுரி மாவட்டம் ஏ, செல்லப்பட்டி புதூரில் மார்க்சிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம் ஏப் 7-ல் தோழர் வடிவேல் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் தோழர்கள் கே. கே கிருஷ்ணன், பி மாரியப்பன், என். பழனிவேல், மாணவர் செ. பழனியப்பன். சேலம் எஸ் கணபதி மற்றும் பலர் இன்றைய அரசியல் நிலை- விவசாயிகள் நிலை குறித்துப் பேசினர். கூட்டத்திற்குப் பின்சேலம் தோழர் சிதம்பர பாரதி குழுவினரின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அப்பொழுது தி. மு க. காலிகள் கலாட்டா செய்தனர். இருப்பினும் கூட்டம் கலையாமல் இருந்தது கண்ட தி மு க,வினர் ஓடிவிட்டனர் கூட்டத்திற்கு மக்கள் திரளாக வந்திருந்தனர்.

## தர்மபுரி மாவட்டத்தில் மார்க்சிஸ்ட் பொது கூட்டங்கள்

மாரண்டஹள்ளி, ஏப். 13—

தர்மபுரி மாவட்டம் மாரண்டஹள்ளியில் 6—4—72-ல் தோழர் டாக்டர் ஏ கே. மாதப்பன் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்தில் தோழர் டாக்டர் கே. துரைசாமி. என். பழனிவேல், பி மாரியப்பன், கே. ஜி கிருஷ்ணன் மற்றும் பலர் இன்றைய அரசியல் நிலை குறித்தும் விவசாயிகள் நிலை குறித்தும் பேசினர்.

கூட்டத்திற்குப் பின்பு சேலம் தோழர் சிதம்பர பாரதியின் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. கூட்டத்திற்கு திரளான மக்கள் வந்திருந்தனர்.

## உடுமலையில் விவசாயிகள் ஆர்ப்பாட்டம்

தமிழ்நாடு விவசாயிகள் சங்க அறைகூவலுக்கேற்ப உடுமலையில் 10—4—72-ம் தேதி ஆர்ப்பாட்டம் நடந்தது. பொது பஸ் நிலைய மைதானத்திலிருந்து வி. ச. செயலாளர், தலைவர் உட்பட 200—க்கு மேற்பட்ட விவசாயிகள் ஊர்வலமாகச் சென்று இறுதியில் தாலுகா அலுவலகத்தின் முன் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

### தாசில்தாரிடம் மகஜர்

பின்னர் தோழர் ஆர். மௌனசாமி, என்.ராஜு, என். வெங்கிடாசலம், எம். சென்னியப்பன், எம். எம். ராமசாமி, ஆர். பார்த்தசாரதி மற்றும் பல தோழர்கள் தாலுகா தாசில்தாரைச் சந்தித்து, உடுமலை தாலுகாவிலுள்ள விவசாயிகள் பிரச்சனை பற்றிய குறிப்பையும், மகஜருடன் இணைத்துக் கொடுத்து இது சம்பந்தமாக நடவடிக்கை எடுக்கவும், அரசுக்கு நிலைமையைத் தெரியப்படுத்தவும் கோரினர். அவரும் ஆவன செய்வதாகவும் நிலைமையை அரசுக்குத் தெரிவிப்பதாகவும் உறுதி கூறினர்.

# கண்ணோட்டம்

## கள்ளப் பணம் வெள்ளைப் பணம் ஆக கதவை திறக்கிறார்கள்!

எவ்வளவுதான் சோஷலிஸ மந்திரத்தை ஜபித்தாலும்...எவ்வளவுதான், ''வறுமையை விரட்டுவோம்!''—என்று முழக்கினாலும்...எவ்வளவுதான், ''சொந்தக்காலில் நிற்கும் சுய பலக்கொள்கையில் ஊன்றி நிற்போம்!''—என்று பீத்தினாலும்...இந்திரா காந்தியின் மத்திய அரசு, நடைமுறையில் என்ன செய்து கொண்டிருக்கிறது?

நடைமுறையில் என்ன செய்துவருகின்றது என்பதைப் பார்த்தால்தான்...அந்த நடைமுறை காரியங்களாலே ஆதாயம் அடைவது எந்த வர்க்கம்? அனாதை ஆவது எந்த வர்க்கம்?—என்பதைப் பார்த்தால்தான்... அம்மையாரின் சோஷலிஸ தெய்வம் எந்த வர்க்கத்தைத் தலையிலே தூக்கிவைத்து ஆடுது?...எந்த வர்க்கத்தைக் காலிலேபோட்டு மிதிக்குது?-என்பதைப் புரிந்து கொள்ள முடியும். என்ன நடந்துவிட்டது? ஏன் இந்தப் பீடிகை?—என்று கேட்கிறீர்களா? ஆம். கேளுங்கள்!

இந்த ஆண்டிலே...இதே மாதத்திலே...புது டில்லியிலே... சேம்பர்ஆப்காமர்ஸ் என்ற பெருமுதலாளிகள் சங்க மாநாட்டிலே...இந்தியப் பிரதமர் இந்திராகாந்தி பேசியிருக்கிறார். என்ன பேசியிருக்கிறார் தெரியுங்களா? இந்திரா பேசினாராம்;

முதலாளிமார்களே, முதலாளிமார்களே! அரசாங்கத்தின் கொள்கையைக்கண்டு யாரும் கலக்கமடைய வேண்டாம். நாட்டின் பொருளாதாரத் துறையிலே, நூற்றுக்கு 80 பங்கை தனியார் துறைக்கே வைத்துக் கொள்ளுங்கள், அதிலே எங்கள் அரசாங்கம் தலையிடாது.

''மீதமுள்ள 20 பங்கிலேகூட, அரசாங்கமே தொழில் நடத்தும் என்று நான் சொல்லவில்லை. அந்த அரசாங்க முதலீட்டிலும்கூட, உங்கள் முதலீட்டையும் போட்டு, கூட்டாகத் தொழில் நடத்தலாம்!

''இவ்வளவு வசதிகளை உங்களுக்கு நாங்கள் செய்திருப்பதினாலே, இதுநாள்வரை கூச்சப்பட்டு மூலதனத்தைப் பெட்டியில் வைத்துப் பூட்டிவைத்தது மாதிரி வைக்காமல், தயவு செய்து வெளியே கொண்டு வந்து முதலீடு செய்யுங்கள்! தொழில்களைத் துவங்க எல்லா உதவிகளையும் தருகிறோம்''—என்று பேசியிருக்கிறார்.

அம்மையாரின் இந்தப் பேச்சைக்கேட்டு எல்லா தொந்தி தொப்பைகளும் பலமாகக் கைதட்டினார்களாம்?

1972 தேர்தலுக்குப் பிறகு மட்டுமல்ல... 1971 தேர்தலுக்குப் பிறகு, ஏப்ரல் மாதத்திலே நடந்த முதலாளிகள் கூட்டத்திலும் கூட, அம்மையார் இப்படித்தான் வாக்குறுதி கொடுத்தார்கள்.

இதைப் பற்றித்தான் நாம் கேட்டோம்.

சோஷலிச துர்க்கையே! ஏகபோகங்களை 25 ஆண்டுகளாக, இப்படி இஷ்டம்போலே மேயவிட்டதினால் தான், ''பணக்காரர்கள் மேலும் மேலும் பணக்காரர்கள் ஆனார்கள்!... ஏழைகள் மேலும் மேலும் ஏழைகளாகப் போனார்கள்!

இதன் விளைவாகத்தான்,75 ஏகபோகமுதலாளிகள் கொழுத்து வலுத்தார்கள்; நாட்டு மக்கள் ஒரு வேளை சோற்றுக்கும் ஆலாய்ப் பறக்கிறார்கள்''- என்று மத்திய அரசே நியமித்த மஹலனபிஸ் குழு அறிக்கை வெளியிட்டதே! அதைச் சொல்லித்தானே ஒவ்வொரு நாளும் ''ஏகபோகங்களை ஒழிக்கப்போகிறோம்! சோஷலிஸத்தை கொண்டுவரப்போகிறோம்! வறுமையை விரட்டப் போகிறோம்!''-என்றெல்லாம் பேசினீர்கள்!

இப்படியெல்லாம் மக்கள் மத்தியிலே பேசிவிட்டு-அதே வாயாலே, அடுத்த நிமிஷத்திலேயே பெரு முதலாளிகள் கூட்டத்திலே போய், ''அஞ்சற்க! 80 சதமான தொழில்களை தனியார்களே வைத்துக்கொள்ளுங்கள்! பொதுவார்துறைக்குள்ளும் புகுந்துகொள்ளுங்கள்!'' என்று உறுதி கூறி ஊக்குவிக்கிறீர்களே, ''சோஷலிஸம் என்பது இதுதானா?... வறுமையை ஓட்டுவது என்பதும் இப்படித்தானா?''. என்று கேட்டோம்.

பொதுவார் துறையும் தனியார் துறையும் ஒரே மெத்தையில் குஷாலா இருக்க அனுமதிப்பது, நல்லா இருக்கா?—என்று நாம் கேட்டால்...அதற்கு அம்மையார் என்ன சொல்லுகிறார் தெரியுங்களா?

''நாட்டிலே தொழில்கள் வளரவேண்டாமா? பின் தங்கிய பகுதிகளில் தொழில்களை வளர்த்து வேலை வாய்ப்புகளை உண்டாக்க வேண்டாமா? அதற்கெல்லாம் முதலீடு செய்யபணம்வேண்டாமா? அரசாங்கத்திடம் எங்கே இருக்குதுபணம்? முதலாளிகளிடம் தானே முடங்கிக்கிடக்குது! அதை தொழில்களிலே ஈடுபடுத்திச் சுழற்றினால்தானே நாடுமுன்னேறும்? என்ன, நான் சொல்லுவது நியாயமாகப்படவில்லையா?''—என்று பதில் அளிக்கிறார் இந்திரா. இதுதான் இன்றைய காங்கிரஸ் அரசின் தத்துவம்...இதேதான் தமிழ்நாட்டில் தி. மு. க. அரசின் தொழில் கொள்கை!

அதனால் தான் தனிப்பட்ட பெரு முதலாளிகளுக்கு புதுப்புது தொழில்களைத் தொடங்க லைசென்சுகளை வாரி வாரி வழங்குகிறார்கள். இந்திய டாட்டா-பிர்லாக்களுக்கு மட்டுமல்ல...அன்னிய முதலாளிகளுக்கும் கூட...

இந்திரா அரசை முற்போக்கு என்றும், சோஷலிஸ வழியிலே சொகுசு நடைபோடுகிறதென்றும் வாண வேடிக்கை நடத்தியவர்களே! உங்களுடைய கவனத்துக்கு ஒரு சொல்! அதாவது:—

இந்திரா அரசு, 1969-ம் ஆண்டிலே பெருமுதலாளிகளுக்கு 30 லைசென்சுகள் கொடுத்தது...1970ம் ஆண்டிலே 20 லைசென்சுகள் கொடுத்தது...ஆனால் 1971 தேர்தலில் தன்னை உறுதியாக ஊன்றிக்கொண்டபிறகு 113 லைசென்சுகள் கொடுத்துள்ளது...!

உங்களுக்கெல்லாம் தெரியாதா? 1969ல் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கூட்டத்தில், பிர்லாவின் பெருஞ் சுரண்டலைப்பற்றி போடுபோடுனு, சக்கை போடு போட்டுவிட்டு, வெளியேவந்தவுடனேயே, 60 கோடி ரூபாய்க்கு உரத்தொழிற்சாலை அமைக்க அதே பிர்லாவுக்கு லைசென்ஸ் கொடுக்கவில்லையா?...... அடுத்த 1970-ம் ஆண்டிலும் அதே பெருச்சாளிக்கு சிமிண்டு ஆலை நிறுவ லைசென்ஸ் கொடுக்கவில்லையா? இவையெல்லாம் பெருமுதலாளிகளை மேலும் மேலும் கொழுக்க வைக்கும் வேலை அல்லவா!

இவற்றிலிருந்து என்ன தெரிகிறது, சென்ற ஆண்டிலே என்றுமில்லாத அளவு லைசென்சுகள் கொடுக்கப்பட்டுள்ளது தெரியவருகிறது. இதுபற்றிக் கேட்டால், ''என்ன செய்வது, முதலாளிகளிடம்தானே பணம் இருக்குது!'' என்கிறார் இந்திரா,

நாம் கேட்பது இதுதான்: ''இவ்வளவு பணம் பெரு முதலாளிகளுக்கு எப்படி வந்தது? நாட்டு நன்மைக்காக அதைக் கைப்பற்றி அரசே தொழில்களை

(7-ஆம் பக்கம் பார்க்க)

# 'இந்திரா அலை' மே. வங்கத்தில்மட்டும் வீசி அடித்துவிட்டதோ?

## ஜனநாயகத்தைப் பாதுகாக்க வருமாறு அரிகிருஷ்ண கோனர் அறைகூவல்

**கல்கத்தா, ஏப். 14--**

**இந்திய ஜனநாயகஇயக்கத்தின் மீதும், அந்த இயக்கத்தின் முன்னணிப் படையாக விளங்கும்மேற்குவங்கமார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிமீதும்,இந்திய ஆளும் வர்க்கங்களும் அவற்றின் அரசும் தொடுத்துள்ள பாசிஸத் தாக்குதலை விவரிக்கும் கட்டுரை இது.**

**இந்த நீசத் தாக்குதலுக்கு எதிராக வீர தீரமிக்க போராட்டத்தில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும் மேற்கு வங்க ஜனநாயக சக்திகளுக்கு சகோதர ஆதரவு அளிக்கும்படி அகில இந்திய விவசாயிகள் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் ஹரிகிருஷ்ணக் கோனர்வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.**

தோழர்களே !

கவனியுங்கள் !

இந்தியாவில் ஜனநாயகத்தைச் சின்னா பின்னப்படுத்தி வருகிறார்கள். இந்தியாவின் இடதுசாரி ஜனநாயக சக்திகளின் கோட்டையாக விளங்கும் மேற்கு வங்கத்திலே—தொழிற்சங்க இயக்கமும், விவசாயிகள் சங்க இயக்கமும் மாபெரும் பலத்துடன் விளங்கும் மேற்கு வங்கத்திலே — பிற்போக்கு ஆளும் வர்க்கங்கள் பயங்கரத்தாக்குதலைத் தொடுத்துள்ளன. நாலரைக்கோடி மக்களைக்கொண்ட மேற்கு வங்கத்தில் ஜனநாயக இயக்கங்கள் மீதும், நாடாளுமன்ற ஜனநாயகத்தின் மீதும் இவர்கள் கொடுவாளை வீசிவிட்டார்கள்.

### மோசடித்தேர்தல்

அண்மையில்நடந்த சட்டமன்றத்தேர்தல், காங்கிரஸ் ஆட்சியாளர்களால் முழுக்க முழுக்க மோசடித் தேர்தலாகவே நடத்தப்பட்டது. என்றும் கண்டிராத...இந்தியாவில் வேறு எங்கும் காணாத...ரௌடித் தாக்குதல்கள் நடத்தப்பட்டன; அரசாங்க நிர்வாகத்தையும் போலீஸ், மத்திய ரிசர்வ் போலீஸ்,ஆயுதப்படைகள், ஸ்தாபன ரீதியாகத்திரட்டப்பட்ட பாசிஸ்ட்குண்டர் கூட்டம் ஆகியவர்களையும் திரட்டிவைத்துக் கொண்ட ஆளும் காங்கிரஸானது, மிகப்பெரிய அளவில் மோசடித் தேர்தலை நடத்தியது. இங்கு நாடாளுமன்ற ஜனநாயக படுகொலை செய்யப்பட்டதை, முதல்தடவையாக மேற்கு வங்கமக்கள்பார்த்தார்கள்.

### வீரப் போராட்டங்களும் மாபெரும் சாதனைகளும்

1969—70-ம் ஆண்டிலே ஏற்பட்டிருந்த காங்கிரஸ் எதிர்ப்பு ஜனநாயக ஐக்கிய முன்னணி மந்திரிசபை இருந்த காலத்திலே, லட்சோபலட்சக்கணக்கான தொழிலாளிகளும், உழைப்பாளி விவசாயிகளும், சுரண்டல் வர்க்கங்களுக்கு எதிராக அலையலையாகப் போராட்டங்கள் நடத்தினார்கள். தீவிர நிலச் சீர்திருத்தங்களுக்காக அவர்கள் நடத்திய போராட்டங்களானது, ஒரு முன்னோடி விவசாய எழுச்சியாகவே விளங்கியது.

அதன் விளைவாக நிலப்பிரபுக்களிடம் அதிதமாக இருந்த 4 லட்சம் ஏக்கர் நிலத்தை விவசாயிகள் எடுத்துக் கொண்டார்கள்; குத்தகை விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்றுவதும் நிறுத்தப்பட்டது.

### 1000 பேர் கொலை அளவிலா அடக்குமுறை

விவசாயிகளின் போராட்டங்களையும் வெற்றிகளையும் கண்டு, பிற்போக்கு வர்க்கங்கள் கோபவெறி கொண்டனர். ஐக்கிய முன்னணி அரசைக் கவிழ்க்கச் சதித்திட்டம் தீட்டினர். இதற்கு மத்திய அரசும் முழு மூச்சுடன் ஒத்துழைத்தது. அதன் விளைவாக 1970 மார்ச் மாதத்தில் ஐக்கிய முன்னணி மந்திரி சபை கவிழ்க்கப்பட்டது.

அன்று முதல், கடந்த 2 ஆண்டுகளாக, ஜனநாயக சக்திகள் மீது படு பயங்கரமான தாக்குதல்களை காங்கிரஸ் ஆட்சியாளர்கள் தொடுத்தார்கள். இந்த அடக்குமுறைப் பேயாட்டத்தை அரை பாசிச பயங்கரம் என்றே கூறலாம்.

ஆளும் கட்சியினால் திரட்டப்பட்ட ஆயுதபாணிகளான குண்டர்கள் படையும், போலீசாரும், விவசாய சங்க ஊழியர்களையும், தொழிற் சங்க ஊழியர்களையும், இதர ஜனநாயக ஸ்தாபனங்களின் ஊழியர்களையுமாக சுமார் 1000 பேர்களைப் படுகொலை செய்தார்கள்.

பத்தாயிரம் பேர் சிறைகளுக்குள் தள்ளப் பட்டார்கள் ஒருலட்சம் பேர்களுக்கு பிடிவாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டு, அவர்களைக் கைது செய்ய நாடு முழுவதும் வேட்டையாடி வருகிறார்கள்.

### உயர்மட்ட சதித்திட்டம்

இந்தப் பின்னணியில் இந்தத் தேர்தல் நடத்தப்பட்டது. பார்லிமெண்டரி ஜனநாயகம் என்றால், குறைந்தபட்ச ஜனநாயக உரிமைகள் இருக்கவேண்டும். ஆனால், ஆளும் காங்கிரஸ் பார்த்தது அனைத்து ஜனநாயக சக்திகளை ஒன்றிணைத்துக் கொண்டு, இடது முன்னணி அமைத்து மகா பலத்துடன் விளங்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப் பார்த்தது. இடது முன்னணியிடம் படு தோல்விதான் கிடைக்கப் போகிறது என்பதை உணர்ந்துகொண்ட ஆட்சியாளர்கள், கொடூரமான முறையில் சகலவித பயங்கரத் தாக்குதல்களில் இறங்கினார்கள். நாடாளுமன்ற ஜனநாயகத் தேர்தலின் சர்வசாதாரண உரிமைகளைக்கூட காலிலேபோட்டு மிதித்தார்கள். உயர்மட்டத்தில் சதித்திட்டம் தீட்டப்பட்டது. தேர்தல் முழுவதையுமே 'மோசடித் தேர்தலாக்கிவிட்டனர்.

### மோசடி

மொத்தம் 280 தொகுதிகள். அதிலே 58 தொகுதிகள், எப்பொழுதுமே இடதுசாரி சக்திகளுக்கு வெற்றி தரும் தொகுதிகளாகும், அவை அனைத்தையும் அப்படியே ஆயுதமேந்திய காங்கிரஸ் குண்டர்களின் கையில் ஒப்படைக்கப்பட்டு விட்டது. அக்குண்டர்கள் போலீஸ் பாதுகாப்பினாலும் அரசாங்க நிர்வாகத்தின் உதவியாலும் வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றிக் கொண்டார்கள். வாக்குச் சீட்டுகளில் அவர்களே இஷ்டம்போல் முத்திரை குத்திக் கொண்டார்கள். இதன் விளைவு என்ன?

வழக்கமாக பல்லாயிரக் கணக்கான வாக்கு வித்தியாசத்தில் இடதுசாரி வேட்பாளர்களைத் தேர்ந்தெடுத்த இத்தொகுதிகளில் இந்தத் தடவை 20 ஆயிரத்திலிருந்து 76 ஆயிரம்வரை வாக்கு வித்தியாசத்தில் தோற்றுப் போனதாக அறிவிக்கப்பட்டது. வித்தியாசத்தைப் பார்க்கும்போதே விசித்திரமாகத் தெரியவில்லையா! ஒவ்வொரு தொகுதியிலுமே சராசரி 75 ஆயிரம் முதல் 1லட்சத்து 20 ஆயிரம் வாக்காளர்கள் தான் இருக்கிறார்கள். இதிலே இவ்வளவு வித்தியாசம்!...

மற்றும் 150 தொகுதிகளில், மிகப்பெரிய அளவில் இடைமறிப்பு வேலைகள், நடைபெற்றிருக்கின்றன. வாக்குப் பெட்டிகள் உடைக்கப்பட்டன. வாக்கு பெட்டிகள் போன்று வேறு பெட்டிகள் கொண்டுவந்து வைக்கப்பட்டன. கள்ள வாக்குச் சீட்டுகள் பயன்படுத்தப்பட்டன. வாக்குச் சீட்டுகளைஎண்ணும்போதே, இடது வாக்குகளை, காங்கிரஸ் வாக்குகள் என்று எண்ணினார்கள். இதெல்லாம் மறைமுகமாகக்கூட நடக்கவில்லை. பகிரங்கமாகவே நடந்தன. தென் கொரியாவிலும், தென் வியட்னாமிலும் உள்ள கைக்கூலி பொம்மை அரசுகள்கூட இப்படிப் பட்ட கேவலமான செயல்களைப் புரிய வெட்கப்படுவார்கள்!

### இந்திரா அலையா? உரிமைக்கு உலையா?

இதுபற்றி ஆளும் வர்க்கங்களும் அவர்களது பிரச்சாரக் குழல்களும் என்ன சொல்லுகின்றன. ஆளும் காங்கிரசுக்கு ஆதரவாகக் காற்று ஓங்கி அடித்துவிட்டதாகக் கூறுகின்றன. இது ஒரு அப்பட்டமான பொய்யாகும்.

நாம் கேட்கிறோம், முதலாவது: கடந்த 1971-ல் நாடெங்கும் தேர்தல் நடந்தது. வறுமையை ஓட்டப் போவதாக வாய்ச்சவடால் அடித்து, மக்களை ஏமாற்றி மாபெரும் வெற்றியை அடைந்தது ஆளும் காங்கிரஸ். ஆனால், அதே காங்கிரஸ்தான் மேற்கு வங்கத்தில் தோற்றுப் போயிற்று. காரணம், மேற்கு வங்கத்தில் ஜனநாயக சக்திகள் பலமாக உள்ளன; அவற்றின் ஸ்தாபனங்களும் பலமாக உள்ளன, இங்கு ஆளும் காங்கிரசானது, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியை விட, குறைவாகத்தான் வாக்குகளும் சீட்டுகளும் பெற்றுள்ளது.

அப்படியிருக்க, 1972தேர்தலில் கேட்கவேண்டுமா? இப்போது மார்க்சிஸ்ட் கட்சி மட்டுமல்ல, அதனுடன் இடதுசாரிக் கட்சிகளும் கூட்டணி வகுத்துள்ளன. எப்படி இருக்கும்?

இந்தத் தேர்தலில் குஜராத் ஒன்றைத் தவிர இதர மாநிலங்களில் ஆளும் காங்கிரசுக்கு, 1971 தேர்தலைவிட குறைவான வாக்குகளே கிடைத்திருக்கும்போது, மேற்கு வங்கத்தில் மட்டும் எப்படி ஆதரவு வாக்குகள் அலைமோதிவந்து விழும்? காங்கிரஸ் கட்சி பலமாக உள்ள மாநிலங்களிலேயே வாக்குகள் குறைந்துவிட்டனவே!...

அப்படியிருக்க மேற்கு வங்கத்தில் 28 சத வாக்குகள் பெற்ற காங்கிரஸ், இப்போது 49 சத வாக்குகளைப் பெற்றதாகக் கூறுவது யாரை ஏமாற்ற?

இரண்டாவதாக;- தேர்தலின் போதும், அதற்குப் பின்னரும், மேற்கு வங்கத்தில் ''ஒரே தலைவர்! ஒரே கட்சி! ஒரே கொள்கை!''-என்ற பாசிஸ்ட் பிரச்சாரமும் மாற்றுக் கட்சியினரைப் படுகொலை செய்வதும் தொடர்ந்து நடக்கிறது.

தோழர்களே! இன்று இங்கு தொழிற் சங்க, விவசாய சங்க வேலைகள் நடைபெறுவதே மிகவும் கடினமாகி வருகிறது. இதுமேற்கு வங்கத்துக்கு மட்டும் ஆபத்துஅல்ல; நாடு முழுவதிலுமே பாசிஸத்தின் அவலட்சணம் தலைதூக்க ஆரம்பிப்பதற்கு முன்னோடியாகும்.

எங்களைப் பொருத்தவரையில், எவ்வளவு தியாகம் செய்தும் ஜனநாயகத்தைக் காக்கப் போராடுகிறோம். அது எங்கள் கடமை.

இந்தியமக்கள் அனைவரும் குறிப்பாக, விவசாயசங்கங்கள் அனைத்தும் ஜனநாயக உரிமைகளைக் காப்பாற்ற மாபெரும் கிளர்ச்சிகளில் ஈடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

(2-ஆம் பக்கம் தொடர்ச்சி)

நடத்தி, அதன் பலனை நாட்டு மக்களுக்கே பயன்படுத்தக் கூடாதா?''—என்று கேட்டால்,

''நம்ம நாடு ஜனநாயக நாடு. நீ சொல்வது ரஷ்யாவிலேமுடியும்,சீனாவிலேமுடியும். இந்தியாவிலேஅது நடக்காது''—என்று பதில் கூறுகிறார்.

விஷயத்தைச் சுருக்குவோம்! இன்று 7000 கோடி ரூபாயோ, 15,000 கோடி ரூபாயோ... 40,000 கோடி ரூபாயோ கறுப்புப் பணம் குவிந்து கிடக்கிறது.

வரிகளைக் குறைத்து, லைசென்ஸ் விதிகளைத் தளர்த்தினால், கள்ளப்பணம் வெள்ளைப்பணமாகும் என்று வாஞ்சு கமிட்டி சிபாரிசு செய்துள்ளது. அப்படித்தான் மத்திய அரசின் மண்டையும் வேலை செய்து வருகிறது.

சோஷலிச டமாரங்களை ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டே... வரி வம்பு இல்லாமல்... தங்கு தடையில்லாமல் ஊரை மேய பெரு முதலாளிகளுக்கு கதவைத் திறந்து விடப் போகிறார்கள்.

என்றும் காணாத முறையில் மக்களை வேட்டையாடப் போகிறார்கள்!

இதற்கெல்லாம் முதலாளிகளின் கள்ளப் பணம், வெள்ளைப்பண அவதாரமெடுத்து மந்திரிமார்களின் காட்ரஜ் பீரோக்களை நிரப்பி விடும்.

இப்படி இருக்குது அரசு!

எப்படி வாழும் நாடு?

**— ஐ. மா. பா.**

# மே முதல் நாளிலிருந்து தீக்கதிர் விற்பனை வாரம்

## மாநில செயற்குழு வேண்டுகோள்

மே மாதம் 1ம் தேதி முதல் 7ம் தேதி முடிய, 'தீக்கதிர்', 'செம்மலர்' பத்திரிகைகளின் **விசேட விற்பனை வார இயக்கத்தை** நடத்துவதென்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநில செயற்குழு முடிவு செய்துள்ளது.

கட்சியின் தமிழ்மாநில மாநாடு சேலத்தில் நடைபெற்ற பின்னர், பத்திரிகை விற்பனையில் கட்சியின் கமிட்டிகளும், தோழர்களும் அதிக கவனம் செலுத்தி பத்திரிகை விற்பனையில் முன்னேற்றத்தை ஏற்படுத்தியுள்ளனர். இந்த வளர்ச்சியை மேலும் துரிதப்படுத்துவதற்கே, மே மாதம் முதல் வாரத்தில் விசேட விற்பனை இயக்கத்திற்கு நாம் திட்ட மிட்டுள்ளோம்.

இந்த விற்பனை வாரத்திற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்கு, கட்சியின் எல்லாக் கமிட்டிகளும் கிளைகளும் இப்பொழுதிருந்தே தயாரிப்புகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

'தீக்கதிர்', 'செம்மலர்' பத்திரிகைகள் பற்றி விளம்பரம் செய்யும் அட்டைகள், தட்டிகள், துண்டுப் பிரசுரங்கள் ஆகியவற்றை வெளியிட வேண்டும். நம் பொதுக்கூட்டங்கள், பேரவைக்கூட்டங்கள் அனைத்திலும் இந்த விற்பனை இயக்கத்தைப் பற்றி பிரச்சாரம் செய்ய வேண்டும்.

கட்சியின் மாவட்ட, பிரதேசக் கமிட்டிகள், பத்திரிகையின் இன்றைய விற்பனை நிலைமையை விவாதித்து, புதிய இடங்களில் ஏஜெண்டுகளை நியமிக்கவும் பழைய இடங்களில் விற்பனையை அதிகரிக்கவும், குறிப்பான குறிக்கோள்களை (கோட்டாவை) இந்த விற்பனை வாரத்திற்குள் நிறைவேற்றத் தேவையான எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும். இதற்கான பொறுப்புக்களை கமிட்டி வாரியாக, கிளைவாரியாக நிர்ணயித்து, இந்தப் பொறுப்புக்கள் நிறைவேற்றப்படுகிறதா என்பதை தொடர்ச்சியாகக் கண்காணிக்க வேண்டும்.

இந்த விற்பனை வாரத்தின்போது, கூடுதலான பத்திரிகைகளை **ஸ்குவாடுகள்** மூலம் இந்த ஏழு நாட்களிலும், தெருத் தெருவாகச் சென்று விற்பனை செய்வது அவசியமாகும். இதற்காகத் தேவைப்படும் பத்திரிகையின் கூடுதல் எண்ணிக்கை குறித்து, பத்திரிகையின் ஏஜெண்டுகள் மூலம், ஏப்ரல் 25ம் தேதிக்குள் 'தீக்கதிர்' காரியாலயத்திற்கு, கட்சிக் கமிட்டிகள் தகவல் அனுப்ப வேண்டும்.

இந்த விற்பனை வாரத்தின்போது, 'தீக்கதிர்' 'செம்மலர்' பத்திரிகைகளுக்கு **சந்தாதாரர்களைச்** சேர்ப்பதற்கு தனிக்கவனம் செலுத்தப்பட வேண்டும். ஏஜெண்டுகள் மூலம் பத்திரிகை கிடைக்காத இடங்களுக்கெல்லாம் சந்தாக்கள் மூலம் விற்பனையை அதிகரிக்க குறிப்பான முயற்சி அவசியமாகும்.

'தீக்கதிர்', 'செம்மலர்' பத்திரிகைகளுக்கு விளம்பரங்கள் சேகரிப்பதற்கும் இந்த வாரத்தில் நம் தோழர்கள் பாடுபட வேண்டியுள்ளது. இதன் முக்கியத்துவத்தை தோழர்கள் புரிந்து கொள்வார்கள் எனக் கருதுகிறோம்.

மே 1ம் தேதி, மே தினத்தன்று, 'தீக்கதிர்' 6 பக்கங்களைக்கொண்டு, சிறப்புக் கட்டுரைகளைத்தாங்கி, மே தின மலராக வெளியிடப்படும். தனிப்பிரதி விலை 20 பைசா. மேதின மலருக்குக் கூடுதல் எண்ணிக்கையின் தேவை குறித்தும், ஏப்ரல் 25ம் தேதிக்குள் 'தீக்கதிர்' அலுவலகத்திற்கு தகவல் தெரிவியுங்கள்.

தமிழகத்தின் முற்போக்கு, ஜனநாயக, இடதுசாரி சக்திகளைப் பலப்படுத்துவதிலும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் இயக்கத்தை வளர்ப்பதிலும் பயனுள்ள கருவிகளாகச் செயல்பட்டுவரும் 'தீக்கதிர்' 'செம்மலர்' பத்திரிகைகளின் விசேட விற்பனை வாரத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கு, கட்சியின் எல்லா அமைப்புக்களும், தோழர்களும், அனுதாபிகளும் பெரும் ஆர்வத்துடன் ஈடுபடவேண்டுமென்று அறைகூவி அழைக்கிறோம்.

புரட்சி வாழ்த்துக்கள் !

மதுரை
13—4—72

**தமிழ் மாநில செயற்குழு**
**இந்திய கம்யூனிஸ்ட் கட்சி**
(மார்க்சிஸ்ட)

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே. முத்தையா.